# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி - கார்த்திகை

2020 - நவம்பர்

KOVILOOR VISUAL REHABILITATION CENTRE
KOVILOOR - 630 307
(MANAGED BY SANATANA DHARMA
WORLD UNIVERSITY TRUST)
INAUGURAL FUNCTION OF
DIPLOMA IN VISION REHABILITATION TRAINER
CERTIFICATE COURSE IN VISION REHABILITATION
(COLLAPARATIVE PROGRAMME WITH
ALAGAPPA UNIVERSITY, KARAIKUDI)
INAUGURATED BY :
PROF.DR.S.MOHAN
(FORMER DEAN OF DEPT. OF EDUCATION
ALAGAPPA UNIVERSITY, KARAIKUDI)
ON 25TH SEPTEMBER 2020
SRI LA SRI MEYAPPA GNANA DESIGA SWAMIGAL
(KOVILOOR ADHEENAM)
K.A.ANITTA MARY
(IN CHARGE OF PROGRAMME)

25.09.2020 அன்று நடைபெற்ற பார்வை - புனர்வாழ்வு மையப் பயிற்சி வகுப்புகள் தொடக்க விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி - கார்த்திகை
2020 - நவம்பர் இதழ் - 101



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

## நடராசர்

தூலஉடல் அன்னமயம் சூக்கஉடல் பிராணன்முதல்
தொக்க மூன்றால்
ஏலஅமர் காரணமெய் ஆநந்த மயம்என்பார்
இசைத்த மூன்றும்
சாலஎழும் ஆநந்த மயமாக யாவர்களும்
தடங்கை கூப்பக்
கோலம்அணி மன்றாடும் சிற்பரனை அற்புதனைக்
குறித்து வாழ்வாம்!

– கோயிலூர்ப் புராணம்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

கொரோனா தொற்றுநோய்ப் பரவல் காரணமாக முடங்கி அமர்ந்து இருக்கும் நாமும் நம்மைச் சார்ந்த ஆசிரியப் பெருமக்களும் நம் மனச் சோர்வு நீங்கவும், கற்பிக்கும் பணி சோர்வடைந்து சரிவடைவதைத் தவிர்க்கவும் எண்ணுகிறோம். நம் மடாலயத்தின் சார்பாகச் சில நல்ல பயன்தரக் கூடிய வாழ்வியல் நெறிமுறைகளைக் கற்பிக்கின்ற தொடர் வகுப்புகளை ஆரம்பித்து நடத்தத் திட்டமிட்டுள்ளோம். நமக்கும் நம்மைச் சார்ந்திருக்கின்ற மாணவச் செல்வங்களுக்கும் இளைஞர்களுக்கும் நன்மை பயக்கும் எனக் கருதிக் கீழ்க்கண்ட வகுப்புகளைத் தொடங்கி நடத்த உள்ளோம். இதைப் பற்றி நாமும் நம் திருமடத்தில் அதிக அக்கறை உள்ளவர்களும் ஆசிரியப் பெருமக்களும் கிளைமட நிர்வாகிகளும் கலந்து பேசிக் கீழ்க்கண்ட வகுப்புகளைத் தொடங்கி நடத்துவது என்று முடிவு செய்திருக்கின்றோம்.

முதலில் வாழ்வியல் நெறிமுறைகளுக்கு அத்தியாவசியத் தேவையான ஆழமிக்க கருத்துக்களை, வழிமுறைகளைச் சொல்லுகின்ற திருக்குறள் நூலினை வரும் விஜயதசமி அன்று (26.10.2020) திங்கட்கிழமை தொடங்குகிறோம். முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்து அதிகாரத்தை, பகல் 12.00 மணிக்கு நாமே விரித்துரைத்து இந்தப் புனிதத் தொண்டினைத் தொடங்கி வைக்கிறோம். அடுத்தடுத்துக் கீழ்க்கண்ட பயனுள்ள வகுப்புகள் நடத்தப்பெறத் திட்டங்கள் வகுக்கப்பட்டு வருகின்றன.

1. திருக்குறள் : தொடக்க உரை பகல் 12.00 மணி (26.10.2020) தொடர்வகுப்புக்கள் திங்கள் கிழமை தோறும் 12 மணிக்கு நடைபெறும்.

2. a) வடமொழி (சமஸ்கிருதம்), ஸ்லோக வகுப்பு நடத்துபவர் : பிரம்மசாரினி நந்தனா சைதன்யா (அர்.தீபா அமைப்பைச் சேர்ந்தவர்) லண்டன்.

b) வடமொழி (சமஸ்கிருதம்), ஸ்லோக வகுப்பு, பள்ளி மாணவர்களுக்கும் இளைஞர்களுக்கும் நடத்துபவர் : திரு. நாகராஜன், டெல்லி.

3. யோகா பயிற்சி தியானப் பயிற்சி நடத்துபவர் : கோவிலூர் வளாகக் கல்வி நிறுவனங்களின் ஆசிரியர்கள்.

4. திருப்புகழ் வகுப்புகள் நடத்துபவர் : உயர்திரு. SP. மெய்யப்பன் (திருமுருகன் திருப்புகழ் பாராயண சங்கம்)

5. பன்னிருதிருமுறை வகுப்புகள் :

கற்பிப்பவர்கள் : தெய்வத்திரு. திருக்களர் இரத்தின சபாபதி ஓதுவார் மூர்த்தி அவர்களின் பேத்திகள் செல்வி. கவிசித்ரா மற்றும் செல்வி. கவிதா.

மேலே சொன்ன அனைத்து வகுப்புகளும் வாரம் ஒரு முறை சுமார் 45 நிமிடங்களுக்கு நடத்தப்படும். அந்தந்த வகுப்புகளுக்கு உள்ள பாடப்பகுதிகள் முன்னரே மாணவர்களுக்கு அளிக்கப்படும். வகுப்புகள் நடைபெறுகின்ற தேதி, நேரமும் பின்னர் அறிவிக்கப்படும். அனைத்து வகுப்புகளும் இணையம் வழியில் **(online)** நடத்தப்படும். வகுப்புகளுக்கு உரிய **Meeting ID** அவ்வப்போது தெரிவிக்கப்படும்.

இவை அனைத்திலும் நம்முடைய மாணவச் செல்வங்கள் பிரியமுடன் கலந்து கொண்டு நல்ல கருத்துக்களையும் நெறிமுறைகளையும் கற்றுத் தேர்ந்து வாழ்வில் நல்நெறியில் நடந்து வாழ்க்கையில் முன்னேறவும் ஆன்மீகச் சிந்தனைகள் நேர்மறை எண்ணங்கள் அனைத்தையும் மனதில் ஆழப்பதிந்து நல்ல வாழ்க்கை அமையவும் நாம் மனமார ஆசிர்வதிக்கின்றோம். எல்லோருடைய மனதிலும் நிம்மதியும் அமைதியும் உத்வேகமும் ஏற்பட்டு நன்னெறி வழியில் வெற்றிகள் பெற ஆதிகுருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



**44. தான்எனும்உட ம்பதுத னைத்தவிர வேறுஆய்**
**யான்எனும் அருத்தம்உள வோஅருளுக எனவே.**

நான் என்று சொல்லப்படுகின்ற உடம்பினைத் தவிர வேறு எப்பொருளும் நான் அறியேன்; உடம்பினைத் தவிர வேறு எப்பொருளுக்காவது நான் என்ற பெயர் உண்டோ என்ற சந்தேகத்தைச் சசிவன்னன் குருமகானிடம் விண்ணப்பித்தான்.

**45. எனதுஆடை பொன்பூம கன்தையல் பாய்மா**
**இபங்கண்மு கம்கால்கை மெய்என்ன என்றும்**
**தனதுஆய் உரைப்பான்வ குத்துஇந்த ஊனைத்**
**தான்என்று அயர்த்தும்சொ லத்தக்கது அன்றே.**

சசிவன்னனுக்குக் குருமகான் உரைத்த பதில்" எனது என்பது எனது ஆடை, செல்வம், மனைவி, மக்கள், ஆடு, மாடு, குதிரை என்னுடைய யானை என்றும் நான் என்பது என்னுடைய கை, கால், முகம், கண், மூக்கு, காது ஆகிய எல்லாம் என்னுடையவை, நானே என்று நினைத்தால் நான் என்பது எந்த உடல் உறுப்பு; எனது என்பது எந்தச் செல்வம் என்று பல ஐயங்கள் தோன்றுவதால் நான் என்பது உடல் இல்லை; சொத்து சுகங்கள் இல்லை என்பதைப் புரிந்து கொள்வாயாக.

**46. தாள்ஆக ஊர்ஆழி யார்வென்னில் வீனா**
**தண்டுஆக வன்மார்பு தட்டுஆக மொட்டா**
**நாளாம்ம லர்ச் சென்னி கூந்தல்கொ டித்தேர்**
**நாள்நாளும் ஊர்வானில் வேறுஆக நாடே.**

மேலே கூறிய தத்துவத்தினை விளக்க நந்திபாராயணர் உடலை ஒரு தேருக்கு ஒப்பிட்டுக் காட்டுகிறார். நம்மை நடத்திச் செல்லும் பாதங்களே தேர்ச்சக்கரங்கள், நம்முடைய பரந்த மார்பு எஜமானர் அமரக்கூடிய ஆசனம், நம்முடைய முதுகெலும்பு சக்கரங்களை இணைக்கும் கம்பி(அச்சு), ஐம்புலன்கள் ஐந்து குதிரைகள்; மனம் என்பது கடிவாளம், புத்தி ஓட்டுகிற தேர்ப்பாகன், நம்முடைய சிரம்

தேரின் உச்சி ஸ்தூபி என்று ஒப்பிடுகிறார். எஜமானன் தேரில் அமர்ந்து பயணிக்கிறார். தேர் வேறு எஜமானன் வேறு என்பது போல நம் உடல் வேறு ஆன்மா வேறு.

**47. கடக்குஞ்ச ரம்பண்ணி உள்நின்று ஒருத்தன்**
**கைபாதம் கன்னங்கள் மெய்போல் இயக்கும்**
**கிடக்கும்ந டத்தாஇ டத்துஇவ் வுடம்பும்**
**கிடக்கும்ஒ ருத்தன்ந டத்தா இடத்தே.**

மூங்கில்கள், துணியாலும் பஞ்சாலும் யானை, குதிரை போன்ற பொம்மைகளைச் செய்து அவற்றை ஒரு பொம்மலாட்டக்காரன் தன்னுடைய உடல் திறமையாலும், விரல்கள் அசைவாலும் அவற்றை ஆடவைக்கின்றான். ஆட்டம் முடிந்ததும் கழற்றிப் போட்ட பின் பொம்மைகள் வெறும் பஞ்சுப் பொதிகளாகக் கிடக்கின்றன. இதே போல் நம்முடைய உடலும் எக்காலமும் ஆன்மாவினால் இயக்கப் படுகிறது. ஆன்மா இல்லையேல் இயக்கமும் இல்லை; உடலும் சடலமே.

**48. ஒருகூறு மலமாகும் ஒருகூறு உடம்பாகும்**
**ஒருகூறு மனமாகும் உண்டுஅற்ற அன்னம்**
**இருகூறு நீஆகின் ஒருகூறும் நீஆம்**
**இழிக்கும்ம லம்சோறு இடப்பட்ட உடலே.**

நாம் உண்கின்ற உணவு பல கூறுகளாகப் பிரிந்து உடல் உறுப்புகளாகவும் கரணங்களாகவும் மலமாகவும் பிரிகின்றன. (ஒரு கூறு மலம், இன்னொரு கூறு மனம், மற்றும் ஒரு கூறு இயந்திரங்கள்) இப்படி இருக்கும் பொழுது உடல் நான் என்றால் நான் என்பது உறுப்புக்களா, அந்தக்கரணங்களா, இல்லை மலஜலமா எதுவும் நான் இல்லை என்பதனால் நான் என்பது ஆன்மசொருபமே.

**49. கிளர்ஆத ரத்துஉண்ணும் அன்னம்சு டக்கை**
**கிட்டப்பொ றாதேஇ ருந்தார்மு னிந்தார்**
**தளராது உறுப்புஒன்றும் உயிர்போக அன்றே**
**தழல்பள்ளி மீதேது யின்றார்ச கித்தே.**

நல்ல பசியோடு உணவின் வாசனை கொடுத்த ஆர்வத்தோடும் சோற்றில் கைவைத்தபின் கடும் சூடு கண்டு அலறி யோசிக்காது சூடாக உணவைப் படைத்த மனையாளைக் கோபித்துக் கொள்கிறான். இந்தச்

சூட்டையே தாங்கமுடியாமல் தவிக்கின்ற ஜீவன் ஆன்மா பிரிந்ததும் உடலைத் தீப்படுக்கையிலே கிடத்தித் தீயினால் எரிக்கின்ற பொழுது எந்த உணர்வும் இன்றிக் கிடக்கிறது ஜடம். இதனைப் பகுத்துப் பார்ப்பாயாகில் உன் உடல் நீ ஆக மாட்டாய் என்பது புரியும்.

**50. நிழல்பாவை கண்ணாடி யில்பாவை கைகால்**
**நிமிர்க்கும்மு டக்கும்இ வன்செய்யும் எல்லாம்**
**தொழிற்பால வாம்மற்றுஇவ் உடலம்செய் தொழிலும்**
**சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே.**

மேற்கூறிய பாடல்களிலும் கூறப்போகும் சில பாடல்களிலும் மனித உடம்பு பஞ்ச கோசங்களால் ஆனது. அவை அன்னமயக் கோசம், பிராணமயக் கோசம், மனோன்மயக் கோசம், விஞ்ஞானமயக் கோசம், ஆனந்தமயக் கோசம்.அன்னத்தாலே வளர்கின்ற தூலதேகம் அன்னமயக் கோசம் என்றும்நுட்பமாகச் செயல் படுகின்ற உள் உறை உடம்பு சூட்சுமத் தேகம் என்று அழைக்கப்படும் சூட்சும தேகத்தில் பிராணமயக் கோசம், மனோன்மயக் கோசம், விஞ்ஞானமயக் கோசம் ஆகியவை அடங்கும்) மனோன்மயக் கோசம் என்பது மனம், புத்தி, சித்தம், அகங்காரம், என்னும் நான்கு அந்தக் கரணங்களாலும் ஞானேந்திரியங்களாலும் நடத்தப் படுகின்ற கோசம் ஆகும். பிராணமயக் கோசம் என்பது சுவாசம், உசுவாசம் என அனைத்து வாயுக்களின் செயல்கள் ஆகும். விஞ்ஞானமயக் கோசம் என்பது புத்தி என்கிற அந்தக் கரணத்தைக் கொண்டு மனத்தால் தெரிவிக்கப்பட்ட விஷயங்களைப் பகுத்து அறிந்து தராதரத்தை நிச்சயிப்பது விஞ்ஞானமயக் கோசம். ஆனந்தமயக் கோசம் என்பது தூல சூட்சும தேகங்களைத் தாண்டி அருபமாகவும் உணர்ச்சி பூர்வமாகவும் இருக்கக் கூடிய ஆனந்தமே வடிவாகக் கொண்ட காரண தேகம் ஆகும். எனவே தேகம் என்பது நான் என்பது இல்லை, ஆன்மாவும் இல்லை. ஆனந்தமயக் கோசம் காரண தேகத்தைச் சாரும்; இப்படி ஐந்து கோசங்களாகப் பேதப்படக் கூடிய உடல் எவ்வாறு ஆன்மாவாகும் நான் ஆகும்.

**51. அறிகின்ற பொருள்என்றும் அறிவானில் வேறே**
**ஆனால்இவ் வூன்ஆக நான்என்ன லாமோ**

செறிகின்ற புள்அல்ல வேகூட இவ் வகையே
  செடமான உடல்நின்னில் வேறுஎன்று தெளியே.

சூரிய ஒளியாலே தெரியப்படும் நம்முடைய நிழலும் கண்ணாடி முன் நிற்கும் பொழுது தெரிகின்ற உருவமும் நம்முடைய பிரதி பிம்பமே ஒழிய நான் இல்லை. நிழல் உருவமோ கண்ணாடியில் தெரியும் உருவமோ நாம் எதைச் செய்கிறோமோ - கைகளை ஆட்டுதல், குனிதல், நிமிர்தல், போன்ற அச்செயல்களை அங்ஙனமே பிரதிபலிக்கும். இதைப் போலவே நம்முடைய அன்றாடச் செயல்பாடுகளும் ஞானசூரியன் அருளாலே கண்ணாடி பிம்பம் போல நிழல் பிம்பம் போல நடிக்கின்றது என்பதைப் புரிந்து கொள்வாயாக.

52. நிலம் ஆகும் வற்புஎன்ற நெகிழ்கின்ற நீர்ஆம்
  நெருப்புஆம்இ தில்சுட்ட எல்லாமும் அநிலம்
  சலம்ஆன புரையான வான்இந்த உடலம்
  சடமான ஐம்பூத உருவங்கள் தாமே.

நம்முடைய தேகம் என்பது கை, கால், மூக்கு, கண், என்று பல பகுதிகளாக உள்ளவை; மேலும் நம்முடைய ஐம்புலன்களாலே அறியப்படக் கூடியவை. இப்படிப்பட்ட பல பாகங்களைக் கொண்டது ஆன்மாவாக முடியாது. ஆன்மா என்பது அறியப்படக் கூடிய பொருள் இல்லை; அறிபவனிடம் அறியப்படும் பொருளும் அறியும் அறிவிலும் வேறுபட்டதே ஆன்மா. இதற்கு உதாரணமாக, பறவைக் கூண்டு என்று சொல்கிறார். கூண்டும் ஆன்மா இல்லை, பறவையும் ஆன்மா இல்லை. அதே போல் தேகமும் ஆன்மா இல்லை, தேகத்தில் இருக்கின்ற உறுப்புக்களும், உயிரும் ஆன்மா இல்லை, பஞ்ச கோசங்களும் ஆன்மா இல்லை. அடுத்து வருகின்ற சில பாடல்களில் நம்முடைய உடல் ஐம்பூதங்களால் ஆனவை என்பதைத் தெள்ளத் தெளிவாக விளக்குகிறார். கடினத் தன்மை உடைய நிலம், நெகிழ்கின்ற தன்மையுடைய நீர், வெப்பத் தன்மையுடைய நெருப்பு, சலனத் தன்மையுடைய காற்று எல்லாவற்றையும் அடக்கிக் கொள்கின்ற வியாபகத் தன்மையுடைய வானம் ஆகியவை இந்த உடலை உருவாக்கிய கருவிகளாகும்.

53. விழியைப்பு மான்என்னில் ரவிஆதி யாலே
விளங்குகின்றது அல்லால்வி ளங்காமை யாலே
ஒழியப்ப டும்கன்னம் முதல் நாலும் உன்றன்
உருக்கண்ட கண்தன்னை ஒப்பாக உள்ளே.

ஒரு மனிதனுடைய விழியில் காட்சிகள் (சட்சு - கண்) காணப்படுகிறது என்றால் அந்தக் காட்சிக்கு ஆதாரம் சூரிய ஒளி அல்லது அக்கினியின் ஒளி ஆகும். மேற்கூறிய புற ஒளிகளின் துணை இல்லாமல் புறக் காட்சியைக் காண முடியாது. அதே போல மற்றைய நான்கு புலன்களாகிய மெய், வாய், மூக்கு, செவிதுவக்கு, சிங்குவை, சிராணம், சுரோத்திரம்) ஆகியவையும் பிற கருவிகளின் உதவியின்றிச்(முறையில்) செயல்படாது. எனவே இவற்றில் எதுவும் நான் இல்லை.

54. அழல் உண்பொருள் களில்உண்பவை முக்கூறுஅதின்
முதல்கூறு
அணிஎன்புந டுக்கூறுஅது மச்சைக்குஅணி ஆகும்
எழில்கொண்டக டைக்கூறுஅது வாக்குஆய்எழும் என்றே
இயல்நான்மறை அந்தங்கள்இ சைக்கின்றன வாமே.

நம்முடைய தேகம் எப்பொழுதும் சற்று உஷ்ணமாகவே இருக்கும்; நாம் உண்ணும் உணவு, பருகும் நீர் ஆகிய யாவும் வயிற்றில் உள்ள ஜடராக்கினியால் வெந்து ஜீரணிக்கப்படும். அப்படி ஜீரணிக்கப்படும் உணவு மூன்று கூறாகப் பிரியும்; முதற்கூறு கடினமான எலும்புகளை உருவாக்கப் பயன்படும். அடுத்த கூறு தசைகளை, நரம்புகளை உருவாக்கப் பயன்படும் மூன்றாவது கூறு நன்மை தரக்கூடிய பேச்சாக வடிவெடுக்கும்.(புலன்களின் கூறுகளாக மூன்றாவது கூறு உருவாக்கும்) எண்ணிப் பார்க்கில் எலும்பும் சதையும் ஆன்மா ஆக மாட்டாது. நீ ஆக மாட்டாய் அதே போல ஐம்புலச் செயல்களும் ஆன்மா ஆகாது.

55. உண்ணும்புனல் முக்கூறுஅதில் முதல்கூறுஉவர் நீராம்
உதிரம்நடு வில்கூறுக டைக்கூறுபி ராணன்
என்னும்இ தில் இருகூறுஅவை நீஆயிடின் அன்றோ
இறுகின்றபி ராணன்அது நீயாகுவை இசையே.

உணவைப் போலவே பருகும் நீரும் மூன்று கூறுகளாகப் பிரியும். முதல் கூறு சிறுநீராக, கழிவு நீராகச் சென்று வரும். இரண்டாவது கூறு ரத்தமாக உருவெடுக்கும். மூன்றாவது கூறு பிராணன் ஆகும். முதல் இரண்டு கூறுகளும் – சிறுநீரும் ரத்தமும் எங்ஙனம் நீ ஆக மாட்டாயோ அப்படியே அழிகின்ற பிராணனும் நீ ஆக மாட்டாய்.

**56. பிராணனும் அல்லதுஞ்சில் உணர்வுஇன்மை யால் அஃது**
**உணரும்பு லன்கள் ஒழிவால்**
**பிராணன்அது என்னின்மன்னை ஒழியாது சேனை**
**நகர்சூழ்வ லம்செய் பொழுதே.**

நாம் தூங்கும் பொழுது பிராணனைத் தவிர மற்றைய இயந்திரங்கள், அந்தக்கரணங்கள் ஏதும் செயல்படுவதில்லை. பிராணன் மட்டும் ஏன் செயல்படுகிறது என்றால் ஒரு வேந்தன் இரவில் நகர்வலம் வருகின்ற பொழுது வீரர்கள் உடன் வராமல் மெய்க்காப்பாளர் ஒருவர் மட்டுமே உடன் வருவது போல ஜீவன் உறங்கும் நேரத்திலும் மெய்க்காப்பாளனாகப் பிராணன் உடன் வருகிறது, இயங்குகிறது.

**57. கரணம்ஒ டுங்கவாயு நிகழ்வுஎன்கொல் என்னின்**
**உடல்காவல் ஆகும் அலதேல்**
**மரணம் அடைந்தது என்று தமர்சுட்டி டாமுன்**
**வளைவாலின் ஞாளி கொளுமே.**

சுழுத்தி அவஸ்தையில் எல்லா இயந்திரங்களும் கரணங்களும் ஒடுங்கிச் செயல்படாது இருக்கும் காலம் பிராணன் மட்டும் இயங்குவது. ஏன் எனில் ஜீவர்களின் உடலுக்குக் காவல் பிராணன், இயக்கம் நின்று விட்டால் மரணம் அடைந்து விட்டது என்று உடலைச் சடலமாகிச் சிதையில் ஏற்றி விடுவார்கள் உறவினர்கள், எனவே பிராணன் எந்நிலையிலும் எக்காலத்திலும் இயங்க வேண்டியது அவசியம்.

**58. இனம்உற எண்ணவுள்ள கரணத்தில் ஒன்றுஇது**
**எனலால் இதுஎன்னது எனலால்**
**மனம்முனம் அன்னம்என்ற அதனாலும் அல்ல**
**மதிஅல்ல அந்த வகையே.**

அந்தக்கரணங்கள் பற்றி விளக்கத் தொடங்குகின்றார். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவை நான்கும் அந்தக்கரணங்கள், உள் இருந்து இயக்கும் கருவிகள். அந்த அந்தக்கரணங்களிலே மனம் என்பதும் ஒன்றாகும்; ஜீவர்கள் என் மனம் என்று சொந்தம் கொண்டாடுவதாலும் உண்ணும் அன்னத்திலிருந்து உருவாகும் ஒரு பாகம் என்பது முன்பே சொல்லி இருக்கிறார். மனமும் மலமும் நான் என்று முன்னம் சொல்லி இருக்கிறோம்; எனவே மனம் ஆன்மா அல்ல. அதே போல் புத்தியும் ஆன்மா அல்ல என்று உணர்வாயாக.

**59. இடர்இன்பு உளதாய் நிலையற்று அறிவற்று**
**என்னும் கரணங் களில்ஆய் எவரும்**
**அடரும் பிறவிக்கு அடிஎன்று உணரும்**
**அகங்கா ரமும்நீ அலஎன்று அறியே.**

ஜீவர்கள் வாழ்வில் இன்பமும் துன்பமும் உள்ளன; அவை நிலையற்றதாக அறியப்படுகிறது. சம்சார பந்தத்திலே பயணிக்கின்ற காலத்திலே தொடர்ந்து வரும் இன்பம் நிரந்தரமான சந்தோஷமாக இருக்க முடியாது. இன்பமும் துன்பமும் மாறி மாறித் தான் நிகழும். பிறவிக்குக் காரணமாக அமைகின்ற அகங்காரமும் ஆராய்ந்து பார்த்தால் அதுவும் ஆன்மா இல்லை. அகங்காரமும் ஒரே மாதிரி நிலைத்து இருப்பது இல்லை. காலந்தோறும் கூடியும் குறைந்தும், இருந்தும் மறைந்தும், செயல்படுவதால் அகங்காரமும் ஆன்மா அல்ல.

**60. ஐயப் படல்ஓர் பொருள்நிச் சயமாய்**
**அறியப் படல்யான் எனதுஎன் றுமதம்**
**செய்யப் படல்செய் வதுசிந் தனையாம்**
**சித்தம் அதுஅன்று எனநீ தெளியே.**

சித்தம் என்பது ஒரு விஷயம்(பொருள்) பற்றி ஐயம் அடைவதும் தொடர்ந்து விசாரித்து உணர்வதும் சித்தத்தின் வேலையாகும். செயல்பட வேண்டிய செயல்களைப் பகுத்து ஆய்ந்து முடிவெடுப்பதும் திட்டமிடுவதும் சித்தமே ஆகும். அவ்வாறு ஒரு பொருள் அல்லது செயல் கருமம் இவற்றிலே அபிமானம் கொண்டு கருமங்களைச் செய்யத் தூண்டுவது சித்தம்; எனவே அதுவும் ஆன்மா அல்ல.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

### அயோத்தியா காண்டம்

### அறிமுகம்

கம்பராமாயணத்தின் இரண்டாவது காண்டம் அயோத்தியா காண்டம். கதைப் போக்கிற்கும் இராவணனுடைய அழிவிற்கும் முக்கியமான நிகழ்வுகள் நடந்த காண்டமாகும். கம்பராமாயணத்திலே ஆழங்கால்பட்டு முற்றும் அறிந்த மேதையர்கள் ஸ்ரீ இராமனுடைய மேன்மைக்கும், இராவணன் அழிவிற்கும், கூனல் மனங்கொண்ட இரண்டு பெண்மணிகளே காரணம் ஆவார்கள் என்று உரைப்பர். காப்பியத்தினுடைய முக்கியத் திருப்பங்களுக்கு, கூனல் உள்ளம் உடைய கூனியும், வஞ்ச நெஞ்சமுடைய சூர்ப்பணகையுமே காரணம் என்பது யாவரும் அறிந்ததே. அயோத்தியா காண்டத்திலே இராமன்பால் பேரன்பும் பாசமும் கொண்டிருந்த நல்ல வள்ளல் குணமுடைய கைகேயினுடைய மனம் மாறி, விஷம் நிறைந்த நெஞ்சினளாகவும், நாகம் போல் விஷம் கக்கும் நாக்குடையவளாகவும் மாறினாள். மந்தரையினுடைய மதிவியூகம் கொண்ட சூழ்ச்சிகளாலும் மனரீதியாகத் தாக்கப்படக் கூடிய சூட்சும இடத்தை அறிந்து அதனைத் தாக்கிய சொல் வன்மையாலும் நிகழ்ந்தது. கணவன் மடியப் போகிறான் எனத் தெரிந்தும் உடும்புப் பிடியாக வரத்தைக் கேட்டுப் பெற்றதும், வசிஷ்ட முனிவருடைய வேண்டுதலை ஒதுக்கி அவர் சினம் கொண்டு கொடுத்த சாபத்தையும் பொருட்படுத்தாது இராமனைக் காட்டிற்கு அனுப்புவதே வரங்களின் முக்கியமாகும். மன்னர் தந்த வரங்களை மறுத்தால் நான் மாள்வேன் என்று பயமுறுத்திப் பெறும் அளவிற்குக் கைகேயியின் உள்ளத்திலே நஞ்சினைப் பரப்பியவள் மந்தரையே. அதே போல் சூர்ப்பனகை, விஷயத்தை ஊதிப் பெரிதாக்கி இராவணனுடைய உள்ளம் சீதைபால் ஈர்க்கப்படவும் அவளை அடைவதற்காக எதை வேண்டுமானாலும் செய்வேன் யாருடன் வேண்டுமானாலும் போரிடுவேன் எதை வேண்டுமானாலும் இழப்பேன் என்ற வீண் பிடிவாதத்தை இராவணன் நெஞ்சில் உருவாக்கியது சூர்ப்பணகையே. இப்படி இரண்டு கூனல் உள்ளம் கொண்ட

பெண்மணிகளே இராவணன் அழிவிற்கும் இராமனுடைய மகோன்னதத்திற்கும் காரணமாவர். இந்த அயோத்தியா காண்டத்தில் இராமனுடைய குணநலங்களும் வீரமும், இலக்குவனுடைய கடமை உணர்வும், பக்தி உணர்வும், வீரமும் பரதனுடைய நற்குணங்களும், நேர்மை உணர்வும், பக்தி உணர்வும், குகனுடைய அளவிலாப் பேரன்பும், சீதா பிராட்டியின் பொறுமையும் மிக அழகாகக் கம்பர் பெருமானால் ஏறக்குறைய 1200 பாடல்களிலே விளக்கப்பட்டுள்ளன. இதிலே 13 படலங்கள் உள்ளன. அவற்றிலே மந்தரை சூழ்ச்சிப்படலம், கைகேயி சூழ்வினைப் படலம், நகர்நீங்கு படலம், குகப் படலம், திருவடிசூட்டுப் படலம் ஆகியவை இன்றியமையாதவை ஆகும். கம்பர் பெருமானுடைய கவியழகும், சொற்கட்டழகும் மிக அருமையாக வெளிப்படுகின்ற காண்டம் ஆகும்.

நாம் இதுவரை பாலகாண்டத்திலே தொடர்புடைய சில சிறப்புடைய கதை மாந்தர்களைப் பார்த்தோம். இப்பொழுது அயோத்தியா காண்டத்தின் கதைச் சுருக்கத்தையும் அதில் காப்பியப் போக்கிற்கு மிகவும் அவசியமான சிறப்புடைய கதை மாந்தர்களைப் பற்றியும் சிந்திப்போமாக. அயோத்தியா காண்டம் 13 படலங்களையும் 1203 பாடல்களையும் உடையது ஆகும். அயோத்தியா காண்டமே இராம காதையினுடைய மிக முக்கியமான ஆதாரமான காண்டமாகும்.

தசரதன் தன்னுடைய மனைவியர், மந்திரி பிரதானிகள், மக்கள் நால்வர், அவர்தம் மனைவியர்கள் ஆகிய அனைவரோடும் மிதிலாபுரியிலிருந்து அயோத்தியா நகருக்கு வந்து சேர்ந்தார்.

ஒரு நாள் தசரதச் சக்கரவர்த்தி கண்ணாடி முன் நின்று தலைவாரிக் கொண்டு இருக்கும் கொழுது இருகாதோரங்களிலும் நரை தோன்றி இருப்பதைக் கண்டார். உடனே அவரும் தனக்கு வயதாகிவிட்டது. இராஜிய பாரத்தை எவ்வளவு காலம் சுமக்க முடியும். நீண்ட காலம் அரசாட்சி செய்து சுகபோகங்களை அனுபவித்து வாழ்ந்த வாழ்க்கையிலே தனக்கெனத் தான் எதுவும் செய்து கொள்ளாமை அவருடைய சிந்தனையில் புலப்பட்டது. இளவரசர்களும் தகுந்த பருவம் அடைந்துவிட்டார்கள். எனவே அவர்களிடம் இராஜிய பாரத்தை ஒப்புவித்து, தான் கானகம் சென்று தவ வாழ்க்கையில் ஈடுபட்டு,

பரமனுடைய அருள் பெற்று, தன் வருங்காலத்திற்கான தவங்களைச் செய்து பரமனடி சேர வேண்டும். அதனைவிடுத்து இராஜிய பாரத்தைத் தொடர்ந்து சுமந்து தனக்கும் மேன்மையின்றி, தன்னுடைய வாரிசுகளுக்கும் பயிற்சி இன்றிக் காலம் கடத்துவது முறையல்ல என்று முடிவு செய்து அரசவையைக் கூட்டி மந்திர ஆலோசனை நடத்தினார்.

மந்திர ஆலோசனையிலே தன் எண்ணத்தை வெளியிட்டு நான் கானகம் சென்று தவம் செய்து பயனடைய விரும்புகிறேன். எனது மூத்த திருமகன் ஸ்ரீராமனுக்குப் பட்டம் சூட்ட எண்ணுகிறேன், உங்கள் கருத்துக்களைத் தெரிவிப்பீர்களாக என்று சபையை நோக்கிக் கூறினார்.

உடனே குலகுருவான வசிஷ்ட மாமுனிவர் சக்கரவர்த்தியே தங்களுடைய எண்ணமும் விருப்பமும் முறையானதே. காலகாலத்தில் நடத்தப்பட வேண்டியவை நடந்தே ஆக வேண்டும். தாங்கள் சொல்லியது போலத் தாங்கள் வனம் சென்று தவத்தில் ஆழ்வது தங்களுடைய ஆன்மாவிற்குப் பலம் சேர்க்கும். கோசல நாட்டை இராமன் ஆள்வது கோசல நாட்டிற்கு வளம் சேர்க்கும். இராமன் வீரமும், தாராள மனமும் நல்ல குணங்களும், குடிமக்கள்பால் நிறைந்த அன்பும் கொண்டவன். எனவே அவனுக்குத் தாங்கள் முடிசூட்டுவது சாலப்பொருந்தும் என்று உரைக்க மற்ற மந்திரி, பிரதானிகள் அனைவரும் அதனை ஆமோதிக்க, தசரதன் இராமருக்குப் பட்டாபிஷேகம் செய்வது என்று முடிவு செய்தார். உடனே அரண்மனை ஜோதிடரை அழைத்து நாள் பார்க்கச் சொன்னார். அவரும் கிரகங்களுடைய நிலையையும் சேர்க்கையையும் பார்த்து மறுநாளே மிகச் சிறந்த நாள், மகுடம் சூட்டுவதற்குத் தகுந்த நாள் என்று சொன்னார். அதன்படியே தசரதரும் முடிவெடுத்து மற்றைய சிற்றரசர்களுக்கும் பொதுமக்களுக்கும் அறிவிக்க ஏற்பாடு செய்யச் சொன்னார்.

வசிஷ்டரை அழைத்து இராமனுக்கு அரசு நெறிமுறைகளைப் போதித்து நாளை காலை இராமனைப் பட்டாபிஷேகத்திற்குத் தயார் செய்வீர்களாக என்று கூறினார். மற்றைய பணியாளர்களை அழைத்து ஊர் மக்களுக்கு இராமர் பட்டாபிஷேக நிகழ்ச்சியைப் பறை

முழக்கித் தெரிவிக்கச் சொன்னார். இப்படியாக நாளை பட்டாபிஷேக விசேஷத்திற்கு அனைத்துக் காரியங்களையும் செய்வதற்கு யாவரையும் ஆயத்தப்படுத்தினார். பின்னர் கைகேயி அரண்மனைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

இதற்கிடையில் செய்தி கேட்ட தாதிப் பெண்கள். அரசியர் மூவருக்கும் தகவல் சொல்லப் பறந்தனர். அந்தப்புரத்தில் உள்ள உறவினர் முறைப் பெண்டிர்க்கும் தகவல்கள் பறந்தன. இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று தசரதன் முடிவெடுத்ததைக் கேட்டு அனைவரும் மிக மகிழ்ந்தனர். அதிலே வருத்தப்பட்ட, சினங்கொண்ட சிறுமதி கொண்ட பெண்மணி ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் மந்தரை, கைகேயினுடைய நாட்டிலிருந்து ஸ்ரீதனத் தாதியாக வந்தவள். கைகேயினுடைய அந்தரங்கத் தாதி ஆனவள்.

மந்தரை கூன் உள்ளம் கொண்டவள், கூன் முதுகும் கொண்டவள். எனவே கூனி என்ற காரணப் பெயரும் உடையவள். இராமனுடைய பால வயதிலே தன் கூன் முதுகை நோக்கி அவன் எறிந்த உண்டை நினைவும் அது ஏற்படுத்திய வலியின் நினைவும் கூனி நெஞ்சிலே கொந்தளிப்பை உண்டாக்கின. சிறு வயதில் விளையாட்டாக, அறியாமல் செய்த சிறு செயலைப் பெரிதாக்கி இராமன் அரசாள்வதா? என்ற வெறுப்பு மந்தரையினுடைய கூனல் மனதிலே பிறந்தது. மந்தரை சூழ்ச்சிப்படலம் என்று கம்பர் சொல்லுகின்ற படலத்திலே கைகேயியின் தூய மனத்தை, கைகேயி இராமர்பால் கொண்டிருந்த பேரன்பை, மாற்றிக் கைகேயினுடைய மனதில் நஞ்சை உருவாக்கினாள், கூனியைப் பற்றிக் கம்பர் கூறுகின்ற பொழுது

**தோன்றிய கூனியும், துடிக்கும் நெஞ்சினாள்**
**ஊன்றிய வெகுளியாள்; உளைக்கும் உள்ளத்தாள்**
**கான்று எரி நயனத்தாள்; கதிக்கும் சொல்லினாள்**
**மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்,** என்கிறார்.

கைகேயி தன்னுடைய மலர் மஞ்சத்திலே அறிதுயில் கொண்டிருந்த காலத்திலே அவளுடைய இதழ்கள் சற்றே விரிந்து புன்னகை புரிந்தன, முகமும் பிரகாசமாக மலர்ந்திருந்தது. இதனைப் பார்த்த கூனி வெகு சினமுற்றாள். கைகேயியை எழுப்பி உனக்கு வந்த தீங்கினை

அறியாமல் வளராத சிறுபிள்ளை மதிபோல் படுத்து உறங்குகிறாயே! இடர் பிணிக்கத் துயர்படப் போவதே அறியாமல் தூங்குகிறாயே! உனக்குப் புத்தி இல்லையே என்று அரற்ற

**............. என் சிறுவர் செவ்வியர்**

**அவ்அவர் துறைதொறும் அறம் திறம்பலர்**

**எவ் இடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு?** என்று கைகேயி பேசுகிறாள்.

தொடர்ந்து

**விராவ அரும் புவிக்கு எலாம் வேதமே அன**

**இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?** என்கிறாள்.

இவ்வாறு மற்ற மூவரிலும் இராமன் பேரில் பேரன்பு கொண்ட கைகேயி மனதை மாற்ற உறுதி கொண்டு முயற்சித்தாள் கூனி. பலபல கூறியும் சிறிதும் அசையாத கைகேயியைக் கண்டு துணுக்குற்றுத் தன்னிடம் உள்ள பிரம்மாஸ்திரத்தைப் பயன்படுத்தினாள். தாய் வீட்டைப் பற்றி, அது இடர்ப்படும் என்று சொன்னால் பெண்கள் மனம் மாறும் என்ற மனவியல் தெரிந்த கூனி, உன் தந்தையின் கேகய நாடு மிகச் சிறியது, படைபலம் குறைந்தது. அண்டை நாடான ஜனகருடைய விதேக நாடு மிகுந்த படைபலம் கொண்டது. இராமன் முடி சூட்டிக் கொண்டால் இராமனுடைய மாதுலரான ஜனகர் கை ஓங்கி நிற்கும், உன் தந்தையின் கை தாழ்ந்து நிற்கும். உன்னாலே உனக்கும் பலன் இல்லை, உனக்கு மகனாகப் பிறந்த பாவத்தினாலே பரதனும் இடர்ப்படப் போகிறான். உன் தாய் வீடும் அழியப் போகிறது. நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். புத்தி இருந்தால் பிழைத்துக் கொள் என்ற கூனியின் சொற்களைக் கேட்டு, தூய நெஞ்சுடைய கைகேயி திரிந்தபால் ஆனாள். நஞ்சைக் கக்கும் அரவம் ஆனாள். இந்த மாற்றம் ஏற்படக் கூனியினுடைய கூர் மதியும், மற்றவர் மனதின் இயல்பை அறிகின்ற ஆழ்ந்த அறிவுமே காரணம். இதுவரை வலுவான தேக்குப் போல் நின்ற கைகேயி தன் தாய்வீடும் அழியும் என்று உணர்ந்து இப்பொழுது தளர்வுடைய முருங்கை எனத் தளர்ந்தாள், சஞ்லம் அடைந்தாள்.

பரதனுக்கு அரசாட்சி பெறுவதற்கு என்ன செய்யலாம்? எப்படிப் பெறலாம்? என்று கூனியையே ஆலோசனை கேட்டாள். கைகேயி பரதனுக்கு முடிசூடும் உரிமையை மட்டுமே கேட்டாள் என்று கூறப்படுகிறது.

எனை உவந்தனை; இனியை என் மகனுக்கும்; அனையாய்
புனையும் நீள் முடி பெறும்படி புகலுதி என்றாள்.

ஆனால் கூனியோ இராமர் கோசல நாட்டில் இருந்தால் பரதனுடைய ஆட்சியை மக்கள் ஏற்கமாட்டார்கள் என்ற கருத்தில் இராமனைக் காட்டிற்கு அனுப்பவும் வரம் கேட்கச் சொன்னாள். இராமனைக் காட்டிற்கு அனுப்ப எண்ணியது கைகேயி அல்ல, மந்தரை என்று தெரிகிறது. பின்னர் அதற்கும் மனம் ஒப்புக் கொண்டு இரண்டு வரங்களையும் கேட்டாள்.

**இரு வரத்தினில் ஒன்றினால் அரசு கொண்டு, இராமன்**
**பெரு வனத்திடை ஏழ் - இரு பருவங்கள் பெயர்ந்து,**
**திரிதரச் செய்தி, ஒன்றினால்; செழு நிலம் எல்லாம்**
**ஒருவழிப்படும் உன் மகற்கு; உபாயம் ஈது என்றாள்.**

சம்பரா அசுரனுடன் தசரதன் போரிட்டு வென்ற காலத்திலே அப்போர்க் காலத்தில் தசரதனுடைய தேர்ப் பாகனாகத் தசரதனுடைய வெற்றிக்குத் துணையாக இருந்தவள் கைகேயி. தசரதச் சக்கரவர்த்தி வெற்றிக் களிப்பிலே உனக்கு இரண்டு வரம் தந்தேன் பெற்றுக்கொள் என்று கூறி அருளினார். கைகேயி அந்த வரங்களைக் காலம் வருபோது கேட்டுப் பெற்றுக் கொள்கிறேன் என்று கூறினாள். இப்பொழுது அந்த வரங்களையும் பெற்றாள். இராமன் காடு செல்லாமல் அயோத்தியில் தவம் இயற்ற அனுமதி கொடு என்று தசரதன் அழுது புலம்பிக் கையேந்தி இரந்து கேட்டதும் கைகேயி, ஒப்புக் கொண்டு தந்த வரம் மறுத்தால் நான் மரிப்பேன் என்று உறுதியாக நின்றாள். பின்னர் வசிஷ்டர் வேண்டவும் சிறிதும் இரக்கம் காட்ட மறுத்தாள்.

இராமரைப் பட்டாபிஷேக மண்டபத்திற்கு அழைத்துச் செல்ல வந்த அமைச்சர் சுமந்திரனை, சக்கரவர்த்தி இராமனிடம் ஏதோ கூற விரும்புகிறார், இராமனை இங்கே அழைத்து வாருங்கள் என்று

கூறினார் கைகேயி. அதன் வண்ணம் சுமந்திரரும் இராமரை அழைத்து வந்தார். இராமர் வந்ததும்

ஒன்று உனக்கு உந்தை மைந்த! உரைப்பது ஓர் உரை உண்டு எனச் சொல்ல, தந்தை கூற அதனை நீவிர் சொல்ல நான் புண்ணியம் செய்திருக்கிறேன். தந்தையும், தாயும், நீரே; தலைநின்றேன்; பணிமின் என்று இராமர் பணிந்து நிற்க.

**ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்,**
**தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந் தவம் மேற்கொண்டு,**
**பூழி வெங் கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,**
**ஏழ் - இரண்டு ஆண்டில் வா என்று இயம்பினன் அரசன் என்றாள்**

இவ்வுலகம் முழுவதும் பரதனே ஆள, நீ சென்று வனத்திலே 14 ஆண்டுகள் தவம் செய்து திரும்பி வருக என்று உரைத்த செய்தி கேட்டு இராமர் சற்றும் வருந்தாமல் முன்னிலும் பிரகாசமாக முகம் மலர்ந்திருக்க

**மன்னவன் பணி அன்றாகின், நும் பணி மறுப்பெனோ? என்**
**பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?**
**என் இனி உறுதி அப்பால்? இப் பணி தலைமேல் கொண்டேன்**
**மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்.**

என்று பணிந்து வணங்கி விடைபெற்றுத் தன் தாய் கோசலையைக் காணச் சென்றார்.

---

**24.10.2020 சனிக்கிழமை அன்று இலக்கியப் பூங்கா**

Wiμs _ **துன்பமாலை பற்றிக் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியை திருமதி. எம்.வள்ளியம்மை உரையாற்றினார்.**



## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 4

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

பெற்ற தாய்தனை மக மறந்தாலும் பிள்ளையைப் பெறும் தாய் மறந்தாலும் என வடலூர் வள்ளலார் சொல்லுமாப் போலே ஆன்மாக்களுக்கு வலக்கையால் படியளந்தும் இடக்கையால் கர்ம வினைகளின் தீர்ப்பை எழுத்தாணியால் ஓலையில் எழுதும் ஆதனூர் பரந்தாமனைச் சேவித்ததும் காப்பியக் கவிஞர், கும்பகோணத்தின் இருதயமாக உள்ள நடு ஊரில் கோயில் கொண்டிருக்கும் ஆரா அமுதனாம் அரங்கனைச் சேவிக்க நம்மைக் குடந்தைக்கு அழைத்துச் செல்கிறார்! திருமாலுக்கான ஐந்து அரங்கத்தில் இக்கும்பகோணம் பேரரங்கம் எனப்படும். மூலவர் சாரங்கபாணி எனப் பெயர் பெற்றாலும் ஆரா அமுத அழகனாய், கிழக்கு நோக்கிய ஆதிசேஷ சயனத்தில் காட்சிதருகிறார்.

மேலும் இத்தலத்தில் ஆரா அமுதனாம் பரந்தாமன், திருமழிசை ஆழ்வாரின் சொன்ன வண்ணம் செய்த பெருமாளாகக் கிடந்தவாறு எழுந்து தலைதூக்கிப்பார்க்க முயலும் அற்புதமான குறிப்பைச் சேவையாகத் தந்து கொண்டிருப்பதாக உள்ளார் எனக் குடந்தைப்புராணக் குறிப்பு தருகிறது.

திருமழிசை ஆழ்வாரின் வரலாற்று வைபவத்தில் ஒரு கூறு இக்குடந்தை சயனத்தில் அடங்கியுள்ளதாக உணரக்கிடக்கிறது.

பல்லவ நாட்டைச் சார்ந்த திருமழிசையாழ்வாரின் சீடனாம் கணிகண்ணனுக்குப் பல்லவனால் ஏற்பட்ட அவமானத்தைப் போக்கியதாக ஒரு கதை உண்டு. கணிகண்ணன் அரசனால் நாடு கடத்தப்பட, பின்னர் அரசன் மனம் திருந்தி, கணிகண்ணனை ஏற்றமான வைபத்தின் நினைப்பில் அழைத்து வரச் செய்ததால் திருக்குடந்தையில் பரந்தாமன் உத்தியோக சயனத்தில் இருந்தாலும், முன்பு பல்லவ நாட்டில் திருமழிசைத் தொடர்பில் எழுந்திருக்க, படுக்கச் செய்ததுபோல ஈண்டும் (குடந்தையில்) கிடந்தவாறு எழுந்திருக்கச் செய்வாரோ என்ற எச்சரிக்கையில் கிடந்தவாறு எழுந்திருந்து பேசுவாழிகேசனே! எனத் திருமழிசையார் குடந்தை சயனத்தைக் குறிக்கிறார்.

பரந்தாமன் விண்ணகரங்களுள் (கோயில்களுள்) கும்பகோணம் மிகவும் இன்றியமையாத இடமாகும். பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசை, திருமங்கை, பூதத்தாழ்வார், பேயாழ்வார் - மற்றும் நம்மாழ்வார் போன்றோரின் மங்களா சாசன சாந்நித்தியம் நிரம்பப் பெற்றது கும்பகோணக் குடந்தையாகும்,

வைணவ சிரேட்டரான நாதமுனிகள் - நாலாயிரத்தில் நம்மாழ்வார்பாடிய ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே நீராய் அலைந்து கரையவுருக்குகின்ற நெடுமாலே என்ற பாடலால் அவரின் ஆற்றாமையைப் பேசிப் பேசி அலமருகின்றார். மனம் அமைதி கொள்ள முடியாமல் நாத முனிகள் நம்மாழ்வாரிடமே சென்று கேட்போம் எனப் பிரேமப்பட்டு ஆழ்வார் திருநகரி சென்று சந்நிதியில் சுவாமி! உம் ஆற்றாமைக்குப் பொருள்யாது? எனப் பாடுகிடந்தாராம், நம்ஆழ்வார் - அசரீரி வாக்கால் திருவரங்கம் போய்க் கும்பகோணம் போனால் தீர்வு கிட்டும் எனக்கூறியது நாதமுனிகள் திருவரங்கைச் சேவித்தவாறு குடந்தையைச் சென்றடைந்தாராம்.

குடந்தைப்பாடலில் பேயாழ்வார் பாடும்போது பரந்தாமன் தென்குடந்தையில் கிடந்தாலும் அவன் ஓங்கி உலகளந்த உத்தமனாய்த் தன்குடங்கை நீரேற்றான்தாழ்வு என்பதை மறந்து எளிவந்த பிரானாக உள்ளான் என அவன் சேவை சாதிப்பதையே தனக்கொருபாடம் புகட்டுவதாக உள்ளதால் தெளிவடைந்தாராம் நாதமுனிகள்.

இந்த வைபவத்தைப் பாரும் எனச் சாரங்கக் கையன் சயனத் திருக்கோலம் நாதமுனிக்குக் காட்ட அவர் கண்டு பணிந்த தலம் என்றார் (2) மீனவர்.

இப்படி அள்ளிப் பருகும் ஆரா அமுதனைச் சேவித்ததும் கும்பகோணத்தை ஒட்டிய திரு விண்ணகர் என்னும் ஒப்பிலியப்பன் கோயில் எல்லைக்குக் கூட்டிப்போன கவிஞர், நம்மை உப்பில்லாத உணவை உண்ணும் அற்புதத் தத்துவத்தைப் பூமாதேவி உடனுறை உப்பிலியப்பனைக் கொண்டு உபதேசிக்கின்றார்.

திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் நம்மாழ்வாரும் மங்களாசாசனம் செய்த விண்ணகரம் இது, கர்ப்பக் கிரகமூலவர் -

உப்பிலியப்பன் எனப்படுகிறார். இதனால் உப்பில்லாத உணவை அங்கீகரிக்கும் அற்புதத் தத்துவ வைபவம் நடந்தது யூகிக்கப்படுகிறது, மீனவரும் ஒரு நாளும் உப்புண்ணா உப்பிலியான் எனத்திருநாமம் சேவித்துப் பாடுகிறார் (3).

ஒப்பற்றவன் என்ற கருத்தின்படி மீனவர் இத்திருத்தலத்தை ஓதுதமிழ்ப் பாசுரத்தில் உளமகிழ்ந்த ஒப்பிலியான் விண்ணகர் (5) என்கிறார்; இப்படிக் கோயிலுக்கும் மூலவருக்கும் வெவ்வேறு பெயரிருந்தாலும் இவ்விண்ணகரத்துள்ள பரந்தாமன், அடியார்கள் செய்யும் எல்லா நிபந்தனைகளுக்கும் உடன்பட்டு அருள்பாலிப்பவன் என்பது உப்பிலியப்பன் என்ற கருவறை மூலவரின் பெயரை விளங்கச் செய்வதாக உள்ளது ஈண்டு நினைவு கூரத் தக்கதாகும். இதற்கானதொரு வைபவம் வருமாறு.

ஆதிமூலப் பரம் பொருள் – உலக மக்களுக்காகப் பழுத்த பழமாகக் கிழக்கோலத்தில் வந்து அறியாச் சிறுமியாகிய சிறு தளிர்போன்ற பூமா தேவியை இத்தலத்தில் மணந்து கொண்டாராம். பால்ய விவாகமானதால் இதற்கான தண்டனையைப் பக்தர்கள் சமர்ப்பிக்கும் பொருட்டு உப்பில்லாத உணவையே நிவேதித்தாலும் பரந்தாமன் உலகியலுக்கு உணர்த்தும் தத்துவத்திற்காக அங்ஙனம் உப்பில் உணவை ஒப்பி அங்கீகரித்தானாம், உப்பில்லாத உணவு உணர்வுகளை மலட்டுத்தன்மை ஆக்கிவிடும் என்பதால் அத்துமீறிய வாழ்க்கையைக் கொள்ளக்கூடாது என்றதற்குத் தன்னையே ஓர் எடுத்துக்காட்டாகக் காட்டிக் கொண்டார் என்பது கருத்து, இதன் குறிப்பைத்தான் மீனவர், உப்பு உண்ணா உப்பிலியான் விண்ணகரம் போந்துறைவான் (3) என்றார்.

இத்தலத்தில் மார்க்கண்டன் பற்றிய குறிப்பை மீனவர் சுட்டி உணர்த்தும் கதைப் போக்கானது நாலாயிரத்திலும் மார்க்கண்டேய புராணத்திலும் காணப் பெறாததாக உள்ளது. எனினும் இத்தலம் மார்க்கண்டேயக்ஷேத்திரம் எனும் இத்தகுதியுடைய பெயரை உடையதாகப் பொதுவாகக் கூறுவதைப் புறந்தள்ள முடியாது எனலாம்.

இங்ஙனமானதொரு வேங்கடா சலபதியைப் போன்று நின்ற திருக்கோல உப்பிலியப்பனைத் தரிசிக்க வைத்த மீனவர் – நம்மைத்

திருவாரூர்ச் சாலையில் உள்ள நாச்சியார் கோயில் என்னும் திருநறையூர்க்குக் கூட்டிச் செல்ல அங்குள்ள சுகந்தவனநாதன் சந்நிதியில் மெய்ம்மறந்து பரந்தாமனை அனுபவிப்பதைக் கவிஞர் வழி உணர்வோமாக!

திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனம் பெற்ற சிறப்பும் சோழன் கோச் செங்கணான் கட்டிய சிறப்பும் உடையதானதொரு திருத்தலமே இந்நாச்சியார் கோயில் என்னும் திருநறையூராகும்.

நறை என்றால் தேன். ஊரைச்சுற்றிய வனமெல்லாம் தேன் சிந்தி, சுகந்த மணம் பரப்புவதால் திருநறையூர் என்றும் சுகந்த வனம் என்றும் பெயர் பெற்றது இந்நாச்சியார் கோயிலாகும்.

நாயகி என்றதே நாச்சியார் என்பதாகும், கோயில் மூலவர் திருநறையூர் நம்பி என்பதற்கேற்பத் தாயார் வஞ்சுளவல்லி எனப் புதியதொரு நாமங்கொண்டுள்ளார். வஞ்சிக்கொடி என்பதன் பெயரைத்தான் அப்படிக் கூறினர். எனினும் நம்பிக்கை நாச்சியார் என்ற சிறப்புப் பெயர் உள்ளதாகக் கூறுவது பெருவழக்காக உள்ளது. அதனால்தான் கவிஞரும் நலம்தரும் ஓர் நம்பிக்கை நாச்சியார் இருந்தருளும் திரு நறையூர் (2) எனப் பாடிப்பரவுகிறார், குறிப்பாகக் கூறினால் பரந்தாமனைவிடப் பெண்மைக்கு ஏற்றம் கூறும் திவ்ய தேசங்களில் இதுவும் ஒன்றாகும். மேலும் கல்யாணகோலக் காட்சியில் சிறப்பாகக் கருதப்படும் பத்துத் திவ்ய தேசங்களில் இதுவும் ஒன்றாம்.

இதனை உறுதிப்படுத்தும் விதமாகவே மாதரசி திருமகட்கு மாலையிட்ட மணவாளன் என்றார் கவிஞர், இந்தத் திருமணக் கோலத்தை இங்குள்ள பரந்தாமன் பெற்றதால்தான் வகுளமலர்த் (மகிழம்பூ) தாருடையான் எனக் கவிஞர் சிலாகித்தது பேருண்மையாகிறது. மடல்பெரிது தாழை மகிழ் இனிது கந்தம் என ஔவைபாடியதற் கேற்ப மகிழம்பூவின் சுகந்தத்திற்கு அளவே இல்லை.

இந்த நாச்சியார் கோயில் வைபவத்தை ஸ்தான விசேஷமாகக் கூறும் வைணவ உத்தமோத்தமர்கள் (உத்தம + உத்தமர்கள் = உத்தமோத்தமர்கள்) இத்தலத்துப்பரந்தாமன் ஞான மகளை முன்னிறுத்தித் தன்னைப்பின் நிற்கச் செய்து காட்டுவதாவது பெண்மையை முன்னிலைப் படுத்தும் தத்துவம் என்க என்கின்றார்.

அதனால்தான் திரு நறையூர் நம்பி, நாச்சியாரைத் திருமணம் கொள்ளும் மாப்பிள்ளையாக மணவாட்டிக்கு அடங்கிய மணவாளனாக நங்கைக்குப் பின் நிற்கும் நம்பியாகச் சேவை சாதிப்பதாய் மூலத்தானம் உள்ளதென ஒத்திட்டுணர்த்துகின்றனர்.

இங்ஙனம் நம்பி - நாச்சியார் திருமண வைபவத்தில் மகிழ்ந்த நம்மைக் கவிஞர் கும்பகோணத்தைச் சுற்றிய திருச்சேறை என்னும் பஞ்சஸார க்ஷேத்திரத்திற்கு அழைத்துப் போய் சாரநாயக, நாயகியரைக் சேவிக்கச் செய்கின்றார். திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனம் பெற்றது இந்தத் திருச்சேறையாகும்,

திருச்சேறைக்கு முந்திய திரு நறையூர் என்னும் நாச்சியார் கோயிலில் திருமங்கையாழ்வார் திரு இலச்சினை பெற்றதாக வைணவ தாதாக்கள் சிறப்பிக்கின்றனர். பஞ்ச சமஸ்காரங்கள் எனும் ஐந்து தத்துவ இலச்சனை (முத்திரை) களை ஒவ்வொரு வைணவரும் பெற்றாக வேண்டும் என்ற வகையில் கலியன் என்னும் சிறப்புப் பெயருடைய திருமங்கையாழ்வார் திரு நறையூரில் தாபம் எனப்படும் முத்திரையை ஞான அநுட்டானம் மிக்க குரு மூலமாகப் பெற்றாராம்.

வைணவன் எனத்தெரிய, வலது தோளில் சக்கரமும் இடது தோளில் சங்கும் பொறிக்கப்படுவதை அடிப்படை முத்திரை என்பர். இதன் பிறகு திருமண் காப்பு (நாமம் தரித்தல்) தாசநாமம்! (அடிமை ஆதல்) மந்திரம் செபிப்பு மற்றும் யாகம் எனும் வேள்விப்பயிற்சி மேற்கொள்ளல் போன்றவை படிப்படியே தொடர்ந்திடும் என்பதால் சங்கு சக்கர தாரியாகத் தன்னை வெளிக்காட்டும் முதல் முத்திரையைத் திருமங்கை மன்னராம் ஆழ்வார் பெற்றார் என்பது நாச்சியார் கோயிலாம் திருநறையூர் வைபவமாகும்.

இந்தப் பஞ்ச சமஸ்காரங்களுக்கு இணையான பெருமையைத் திருமங்கையாழ்வாரால் பஞ்ச சார க்ஷேத்திரமாக உயர்ந்துள்ள தலந்தான் திருச் சேறையாகும், சேறு என்ற சொல் அழுக்கு, சகதி, சாரம் (அடிப்படை) இனிமை என்றெல்லாம் பொருள் தந்தாலும் ஆன்மாக்களின் சேற்றைக் கழுவித் தூய்மை செய்து ஆட்கொள்ளும் பஞ்சேந்திரிய சார மகிமையை உணர்த்தி உபதேசிக்கும் விதமாகவே திருமங்கையாழ்வார் திருச்சேறைத் தலப் பாசுரத்தின் 7ஆம் பாடலில்

கீழ்க்கண்டவாறு பஞ்சேந்திரிய சார அர்ப்பணிப்பைப்பாடி இத்திருத்தலத்தைச் சாரக்ஷேத்திரத்தலமாக்கினார் எனலாம்.

பைவிரியும் வரியரவில் படுகடலுள்
துயிலமர்ந்த பண்பா! என்றும்
மைவிரியும் மணிவரைபோல் மாயவனே
என்றென்றும், வண்டார் நீலம்
செய்விரியும் தண் சேறை எம்பெருமான்
திருவடியைச் சிந்தித் தேற்கு என்
ஐயறிவும் கொண்டானுக் காளானார்க்கு
ஆளாம் என் அன்புதானே!

ஆக, பிரபஞ்சமென்னும் வயலில் விளைவித்து உற்பத்தி செய்யத்தக்க உயிர்களாம் பஞ்சேந்திரிய விதைகளைப் பாதுகாத்துத் தரும் சேமச் செப்பறையாக உள்ளதே இந்தத் திருச் சேறை என்பது கருத்து.

மேற்படியான பிரபஞ்ச உற்பத்திக்கெல்லாம் சாரமான இடம் இச்சேறையே என உணர்ந்த மீனவனார் நான்முகனார் மண்ணால் கடம் செய்து நான் மறையை அதில் மறைத்துக் காத்தபதி (3) என்றார். இருப்பினும் திருக்சேறை நாதனைத்தன் நாவிரியும் தமிழாலே திருமங்கை மாவிரதம் உடையோரின் மறைப் பொருளைப் போற்றுதும் என்றபடிப் பஞ்ச சாரமாம் திருச்சேறை விட்டு அதற்கு அடுத்துள்ள திருக்கண்ண மங்கை என்னும் திவ்ய தேசத்திற்கு மீனவருடன் சென்று சேவிப்போமாக!

*(தொடரும்...)*



# பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள் TALES AND PARABLES என்ற ஆங்கில நூலிலிருந்து தமிழில்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

9

நாம் பயன்படுத்தும் தலையணைகள் பார்வைக்கு வேறுவேறாகத் தோன்றுகின்றன; சில சிறியவை; வேறுசில பெரியவை; நிறத்தாலும் வேறுபட்டுத் தோன்றுகின்றன; ஒன்று சிவப்பு நிறமாக த் தெரிகிறது; இன்னொன்று நீல நிறமாகத் தெரிகின்றது; அடுத்தது கறுப்பாகத் தெரிகிறது; ஆனால் உள்ளே இருக்கும் பொருள் பஞ்சு என்ற ஒரே பொருள்தான்; இப்படித்தான் பிரபஞ்சத்தில் மனிதர்களும் நமது பார்வைக்கு வேறுபட்டுத் தென்படுகிறார்கள்; சிலர் கறுப்பு நிறமாகத் தென்படுகிறார்கள்; சிலர் சிவப்பு நிறத்தில் தென்படுகிறார்கள்; வேறு சிலர் நல்லவர்களாக இருக்கிறார்கள்; சிலர் குணத்தால் தீயவர்களாக இருக்கிறார்கள்; ஆனால் அனைவரின் உள்ளங்களுக்குள் ஒரே கடவுள் தான் வாசம் செய்கிறார்.

10

தேனீயானது ஒரு மலரில் தேன் எடுப்பதற்காக மலர்களைச் சுற்றிச் சுற்றி வரும்; அப்போது அது ஒலி எழுப்பிப் பல்வேறுவிதமாக ரீங்காரம் செய்யும்; சப்தம் விதம் விதமாக வெளிவரும்; ஆனால் ஒரு பூவில் அமர்ந்து, பூவுக்குள் நுழைந்து விட்டால் சப்தம் செய்யாது; மனிதனும் அப்படித்தான்; வெறும் கொள்கைகளையும் சித்தாந்தங்களையும் உரத்துப் பேசிக் கொண்டிருக்கும் வரையில் மனிதனிடம் குழப்பங்களும் கூச்சல்களும் மேலோங்கிக் காணப்படும்; மனிதன் பக்தி என்னும் அமுதத்தை உணர்ந்து ருசிபார்க்க ஆரம்பித்து விட்டால், சப்தம், ஆரவாரம் இருக்காது; சாந்தமே நிலவும்.

11

மிக நீண்ட காலம் தவம் செய்தல், சித்தி அடைந்தேன் என்று அறிவித்தல், அற்புதங்கள் காட்டி மயக்குதல் போன்ற நடவடிக்கைகள் மீது பரமஹம்சர் ஆர்வம் செலுத்தவில்லை. அதை விளக்குவதற்காகப் பரமஹம்சர் ஓர் எளிய கதை சொன்னார். ஒரு குருவுக்கு, சீடன் ஒருவன்

இருந்தான்; பதினான்கு ஆண்டுகள் கடும் தவம் புரிந்தான்; தன் குருவிடம் வந்து, மகராஜ், நான் பதினான்கு ஆண்டுகள் தவம்புரிந்து பேராற்றல் பெற்றிருக்கிறேன். தண்ணீரின் மேல் நடப்பேன்; பெரிய ஆற்றையும் அந்த ஆற்றலால் எளிதில் கடந்து விடுவேன் என்று பெருமை பேசினான்; அவனது கடுந்தவ ஆற்றல் இதற்குத்தான் பயன்பட வேண்டுமா? என்று பரமஹம்சர் கருதினார். ஆகையால், பதினான்கு வருடக் கடுந்தவ ஆற்றல் இந்தச் சின்னக் காரியத்துக்காகவா பயன்பட வேண்டும்? ஓடக் காரனிடம் ஓர் அணா காசு கொடுத்தால் இக்கரையிலிருந்து அக்கரைக்கு மிக எளிமையாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவானே! என்றார்.

12

கடவுள் தான் பிரபஞ்சத்தில் எல்லா இடங்களிலும் இருப்பதாகச் சொல்லப்படுகிறதே! நம்பப்படுகிறதே! பின் எதற்காகக் குறிப்பிட்ட இடத்தில் கோவிலைக்கட்டி, அங்கே போக வேண்டும், போய்த்தான் வணங்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார்களே, ஏன்? என்ற விவாதம் பரமஹம்சரிடம் முன்வைக்கப்பட்டது. அதற்குப் பரமஹம்சர் பின்வருமாறு மொழிந்தார் : பால் என்பது பசுவின் உடம்பின் முழுவதிலும் வியாபித்துக்கிடக்கிறது; நமக்குப்பால் வேண்டும் என்றால் பசுவின் உடம்பிலான வேறு இடங்களில் இருந்து பெற முடியாது; பசுவின் கொம்பு, கண், காது, வால் போன்ற இடங்களைத் தொட்டுப் பால் பெற முடியாது; பசுவின் மடிதொட்டு மடியின் வழியே தான் பால் பெற முடியும்; அது போன்றது தான் ஆலயம் சென்று தொழுவதும் ஆகும்.

13

குழந்தை தன் தாயாரைப் பார்த்து, அம்மா எனக்குத் தூக்கம் வருகிறது; தூங்கப் போகிறேன்; எனக்குப் பசிக்கும் நேரத்தில் மறந்துவிடாமல் என்னை எழுப்பிவிடு அம்மா என்றது. அதற்கு, அம்மா சொன்னாள்; குழந்தாய், நான் எழுப்பிவிட வேண்டும் என்ற அவசியம் இல்லை; அந்தப் பசியே உன்னை எழுப்பிவிடும்.



# ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

## 3. திருக்கரம்பனூர் என்ற உத்தமர் கோவில்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் மூன்றாவது திவ்யதேசம், திருக்கரம்பனூர் என்ற உத்தமர் கோவில். சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது மூன்றாவது திருத்தலமாகும்.

ஒருசமயம் படைக்கும் கடவுள் பிரம்மாவுக்கும் காக்கும் கடவுள் திருமாலுக்கும் இடையே யார் பெரியவர் என்பதில் பிரச்சனை. தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் அடிமுடிகாணாத விஸ்வரூப மூர்த்தியாக ஜோதிவடிவுடன் ஓங்கிநின்றார். தமது அடியையும் முடியையும் யார்முதலில் கண்டுதிரும்புகின்றனரோ அவர்தான் இருவரில் பெரியவர் என்றார். அன்னப் பறவையாகப் பிரம்மாவும், வராகமாகத் திருமாலும் வடிவம் கொண்டுபோட்டியில் வெல்லப் புறப்பட்டனர். அதளபாதாளம் வரைதோண்டித் துருவியும் அடியைக் காணாமல் தவித்ததிருமால் தனதுதோல்வியை ஒப்புக் கொண்டு திரும்பினார். ஆனால், பிரம்மாவோ, சிவனாரின் முடிதெரியாததால், சிவனாரின் தலையில் சூடப்பட்டு, பூமிக்குத் திரும்பிக் கொண்டிருந்த தாழம் பூவை வழியில் கண்டார். தாழம்பூவைப் பொய்ச் சாட்சிக்கு அழைத்த பிரம்மன். தான் திருமுடியைக் கண்டதாகவும், அதற்குச் சாட்சியாகத் திரு முடியிலிருந்து தாழம்பூவை எடுத்து வந்ததாகவும் தெரிவித்தார். பிரம்மன் கூறியதைப் பொய் என்றறிந்த சிவன், பொய்யுரைத்த பிரம்மனுக்கு இனிமேல் பூலோகத்தில் தனியாகக்கோயிலோ பூஜையோ இருக்காது எனச் சபித்தார்.

பிரம்மாவிற்குப் பூலோகத்தில் தனக்கெனத் தனியே கோயில் இல்லையே என மனக்குறை இருந்தது. எனவே, மகா விஷ்ணு அவரைப் பூலோகத்தில் பிறக்கும்படி செய்தார். பிரம்மா இத்தலத்தில் பெருமாளை வணங்கித் தவம் செய்து வந்தார். அவரது பக்தியைச் சோதிப்பதற்காக மகாவிஷ்ணு, கதம்ப மரத்தின் வடிவில் நின்றுகொண்டார். அந்த உருவிலும் பிரம்மா அவரை அறிந்து

கொண்டு, தன் கமண்டல நீரால் கதம்ப மரத்திற்குத் திருமஞ்சனம் செய்து திருமாலைத் தொடர்ந்து வழிபட்டதால், மனம் மகிழ்ந்த விஷ்ணு, இது போலவே எந்நாளும் என்னைத் துதித்து இவ்விடத்தே வழிபடவும் என்று கூறியதால், பிரம்மனும் இங்கு கோவில் கொண்டு தனிச்சன்னதியில் உள்ளார். பிரம்மாவுக்கு இடப்புறத்தில் ஞானசரஸ்வதி தனிச்சன்னதியில் தெற்கு நோக்கியபடி இருக்கிறாள். இவள் கையில் வீணை இல்லாமல் ஓலைச்சுவடி ஜெபமாலையுடன் காட்சிதருகிறாள்.

பிரம்மா பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்த கமண்டல நீரே பெருக்கெடுத்துக் குளமாகத் தேங்கிக் கதம்பத் தீர்த்தமாயிற்று.

இத்திருத்தலம் திருவரங்கத்தில் இருந்து 1.5கி.மீ தொலைவில் கொள்ளிட நதிக்கரையில் உள்ளது.

மூலவர் : புருஷோத்தமன்
தாயார் : பூரணவல்லி
தலவிருட்சம் : வாழைமரம்
தீர்த்தம் : கதம்பதீர்த்தம்
விமானம் : உத்யோகவிமானம்
கோலம் : கிழக்குப் பார்த்த புஜங்கசயனக் கோலம்
உற்சவர் பிரயோகச் சக்கரத்துடன் நின்றகோலம்

இங்கு சிவகுரு தெட்சிணாமூர்த்தி, விஷ்ணு குரு வரதராஜர், குரு பிரம்மா, சக்தி குரு சவுந்தர்ய பார்வதி, ஞான குரு சுப்பிரமணியர், தேவ குரு வியாழன், அசுர குரு சுக்கிராச்சாரியார் ஆகிய ஏழு குரு சுவாமிகளும் எழுந்தருளியிருப்பதால், இத்தலம் சப்த குருதலம் எனப்படுகிறது. என் அய்யா நா. மீனவனார் பரந்தாமன் பாமாலை நூலில் திருக்கரம்பனூர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் :

1. நான்முகனாகிய பிரம்மன் வணங்குவதற்காக, திருமால் கதம்ப மரமாக உருவெடுத்து நின்றமையால், கதம்பனூர் என்றே இத்தலம் அழைக்கப்பட்டு, காலப் போக்கில் கரம்பனூர் ஆயிற்று. தேவர்கள் தொழுகின்ற கரம்பனூரில் அமர்ந்திருக்கின்ற நாராயணனின் தாமரைப் பூப்போன்ற சேவடிகளைப் போற்றச் சொல்லும் முதல் பாடல் :

**நான்முகனார் தான்வணங்க நற்கதம்பத் தருவாகி**
**வானமரர் தொழுதேத்த வாய்த்ததிருக் கரம்பனூர்**
**தானமர்ந்த நாரணன்தன் தாமரைப்பூஞ் சேவடியைக்**
**கானமர்ந்த துளவத்தான் காலடியைப் போற்றுதுமே.**

2. பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் தனித்தனிச் சன்னதிகளில் அம்பாள்களுடன் காட்சிதரும் ஒரேதலம் இத்தலமாகும். ஜனகர் இங்குள்ளகதம்பத் தீர்த்தக்கரையில் ஒருயாகம் செய்தார். யாகத்தில் அவியுணவுகளை நாய் ஒன்று புசித்து மாசு படுத்திவிட்டதால், அத்தோஷம் நீங்குவதற்காக, ஜனகர் மீண்டும் யாகத்தைத் துவங்கிக் கதம்ப மரத்தைப் பக்தியோடு வழிபட்டார். அப்போது அரவணையில். அறிதுயிலமர்ந்த கோலத்தில் தனது நாபியில் பிரம்மாவுடனும், அருகில் பிச்சாண்ட மூர்த்தியான சிவனுடனும் திருமால் ஜனகருக்குக் காட்சி கொடுத்தார். மும்மூர்த்திகளையும் ஒருங்கே கண்ட ஜனகர்தான், இங்கு மும்மூர்த்திகளுக்கும் ஆலயம் எடுத்தார் என்ற வரலாறும் உண்டு. கார்த்திகை தீபத்திருவிழாவின் போது, மூவருக்கும் மூன்று திசைகளில் சொக்கப் பானை கொளுத்தப்பட்டு ஒன்றாக உலா வருகின்றனர். இத்தகைய திரிமூர்த்தித் தலமான உத்தமனார் கோயிலில் வீற்றிருக்கும் நாயகனை வணங்கச் சொல்லும் இரண்டாம் பாடல்:

**உலகளந்த பெருமான்வாழ் உத்தமனார் திருக்கோவில்**
**இலகுமருள் மும்மூர்த்தி இருந்துபணி கின்றசீர்த்**
**தலமிதனைப் பூங்காவில் தாதூதும் வண்டினங்கள்**
**நலம்பாடவீற்றிருக்கும் நாயகனை வணங்குதுமே.**

3. சிவனைப் போலவே ஐந்து தலைகளுடன் இருந்த பிரம்மாவைக் கண்ட பார்வதி தேவி, அவரைத்தனது கணவன் என நினைத்துப் பணிவிடை செய்தாள். இக்குழப்பத்தைத் தீர்ப்பதற்காக, சிவபெருமான், பிரம்மாவின் ஒருதலையை மட்டும் கிள்ளி எடுத்தார். இதனால் பிரம்மா நான்முகன் ஆனார். சிவனுக்குப் பிரம்மஹத்திதோஷம் ஏற்பட்டு, பிரம்மாவின் கபாலமும் அவரது கையுடன் ஒட்டிக் கொண்டது. அவருக்குப் படைக்கப்பட்ட உணவுகள் அனைத்தையும் கபாலமே எடுத்துக் கொண்டது. எவ்வளவு உணவு இட்டாலும் கபாலம் மட்டும்

நிறையவில்லை. பசியில் வாடிய சிவன், அதனைப் பிச்சைப் பாத்திரமாக ஏந்திக் கொண்டு பிச்சாடனார் வேடத்தில் பூலோகம் வந்து பல தலங்களுக்கும் சென்றார். அவர் இத்தலத்திற்கு வந்த போது, பெருமாள் சிவனின் பாத்திரத்தில் பிச்சையிடும் படி மஹாலெக்ஷ்மியிடம் கூற, அவளும் கபாலத்தில் பிச்சையிடவே, அது பூரணமாக நிரம்பிச் சிவனின் பசி நீக்கியது. இதனால் தாயார் பூரணவல்லி என்ற பெயர் பெற்றாள். இக்கோவில் பிச்சாண்டார் கோவில் என்ற பெயரையும் பெற்றது. என்றும் உணவிற்குப் பஞ்சமில்லா நிலையைத் தரக்கூடிய பூரணவல்லியுடன் இருக்கும் உத்தமனைவணங்கக் கூறும் மூன்றாம் பாடல்:

**மாதவங்கள் செய்வார் மதிக்கின்றமாணிக்கம்**
**போதம் தருமோர்நற் பூரண வல்லியுடன்**
**ஓதரிய புகழார்ந்த உத்தமனை மூவுலகும்**
**பாதத்தால் அன்றளந்த பண்ணவனைத் தொழுதிடுமே.**

4. இங்குள்ள மூலவர் புருஷோத்தமர். புருஷஉத்தமர். அதனால் இக்கோயில் உத்தமர்கோயில் ஆயிற்று. கணவனும் மனைவியும் சேர்ந்துவாழ்வதே உத்தமம். இங்கு மும்மூர்த்திகளும் தம்பதிசமேதராய்க் காட்சி அளிப்பது உத்தமமாதலால், இத்தலம் உத்தமர்கோயில் ஆயிற்று எனலாம். மேலும், பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான ஆண்டாள், தனது திருப்பாவையில், பெருமாளை ஓங்கி உலகளந்த உத்தமன் எனப் பாடுகிறார். இந்த உத்தமனார் கோவிலில் உலகாள இருக்கின்ற பெருமாள் இருந்து அருள் செய்யும் பதியானகரம்பனூரைப் பணிவோம் எனக் கூறும் நான்காம் பாடல்:

**முத்திலங்கும் ஏழ்கடல்போல் முழங்குமொரு சங்கமுளான்**
**உத்தமனார் கோயில் உலகாள இருந்தருள்வான்**
**எத்திறத்தான் என்றறிய இயலாத பெருந்திறலான்**
**திருத்திகழும் கரம்பனூர்த் திருப்பதியைப் பணிந்திடுமே.**

5. ஒருநாள் அரிஷ்டாசுரன் என்ற அரக்கன் மிகப் பெரிய எருதின் வடிவில் பிருந்தாவனத்துக்குள் நுழைந்து, காலால் பூமியைக் கிளறியபடி குழப்பம் விளைவித்தான். பிருந்தாவனவாசிகள் எல்லோரும், கிருஷ்ணா எங்களைக் காப்பாற்று என்று அழைத்தனர்.

கிருஷ்ணர் உடனே அசுரனின் கொம்புகளைப் பிடித்து, அவனைத் தூக்கி எறிந்தார். இவ்வாறு அடலேற்றை அன்றெதிர்ந்த பெருமானை, பவளவாய்ச் சுந்தரனை, கரம்பை மன்னவனைப் பணியச் சொல்லும் ஐந்தாம் பாடல்:

**சுடராழி வில்வீசச் சுரிசங்கம் கையுடைய**
**அடலேற்றை அன்றெதிர்ந்தே அருளாளும் பெருமானை**
**சுடர்பவள வாயானை உத்தமனூர்ச் சுந்தரனை**
**மடைதிகழும் வயற்கரம்பை மன்னவனைப் பணிகுதுமே.**

இத்தலம், திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் பெற்றதிருத்தலமாகும்.

பேரானைக் குறுங்குடிஎம்பெருமானைத் திருத்தண்கால்
ஊரானைக் கரம்பனூர் உத்தமனைமுத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ் வுலகுண்டும்
ஆராதென்று இருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே.

*(தொடரும்...)*

## சீனத்தில் சிவன் கோயில் - நகரத்தார்களின் பங்கு

(மா. இளங்கோ, குழிபிறை)

நகரத்தார்களின் நிழல் - கோயில் பணிகள் என்றால் அது மிகை அல்ல. நகரத்தார்கள் இந்தியா மட்டுமல்ல உலகின் பல பகுதிகளிலும் அறப்பணிகள் செய்துள்ளனர்.

சீனாவில் இருந்த ஒரு சிவன் கோயில் கட்டுமானத்தில் நகரத்தார்களின் பங்கு மிகுதியானது என்றால் அது பலருக்கும் வியப்பைத்தரலாம். உலகின் பல ஆராய்ச்சியாளர்கள் சீனாவில் இருந்த சிவன் கோயிலைக் கட்டியது தமிழர்கள் என்று ஆணித்தரமாக நிறுவி உள்ளனர். ஆய்வாளர்கள் அந்த அளவோடு நிறுத்திக் கொண்டு விட்டார்கள். அதில் நகரத்தார்களின் பங்களிப்பைப்பற்றிப் பேசுவதுதான் இந்தக் கட்டுரை.

தமிழக வரலாற்றின் பிரிக்க முடியாத பக்கங்களாக நகரத்தார்களின் வரலாறு திகழ்கிறது. இன்று நேற்றல்ல ஈராயிரம் ஆண்டுகளின் தொடர்ச்சியான வரலாற்று அடையாளங்களைக் கொண்டவர்கள் நகரத்தார்கள்.

கொண்டுவிக்கப் போயிருக்காக என்ற பேச்சு வழக்கு நகரத்தார்களிடம் மட்டுமே கேட்கக் கூடியதான சொற்களாக ஒருகாலத்தில் இருந்தது. உள்நாட்டில் செய்யப்பட்ட வணிகத்திற்காக அல்ல, பொருட்களைக் கடல் கடந்து கொண்டு போய் விற்றுவிட்டு வந்ததினால் ஏற்பட்ட சொல் வழக்கு அது. உப்பும் சங்கும் கடல் வணிகத்தின் தொடர்ச்சியே.

தமிழர்களின் அடையாளங்களை உலகம் முழுவதும் பதியச் செய்தவர்கள் தமிழர்களின் ஒரு சமூகமான நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆவர். கடல் வணிகத்தில் பல நூற்றாண்டுக் காலம் வெற்றி பெற்றவர்களாகவே திகழ்ந்தனர் நகரத்தார்கள்.

பல சமூகங்களாக வாழ்ந்தாலும் தமிழ் மொழியும், பண்பாடும், நாகரீகமும் அவர்களை ஒரு மாலையாகத் தொடுத்து வைத்திருந்தது. இணக்கமான போக்கு அனைவரிடத்திலும் இருந்ததால்தான் தமிழ் மக்கள் எல்லைகளைக் கடந்து சிறப்புற்றிருந்தனர். தமிழின் அடையாளங்கள் பரந்து விரிந்து பரவியது.

ஒரு தனிப்பட்ட சமூகத்தின் வெற்றியையும் பெருமையையும் தமிழ்ச் சமூகத்தின் வெற்றியாகவே நாம் கொள்ளவேண்டும். அவ்வகையில் நகரத்தார்களின் வரலாறு என்பது தமிழ்ச் சமூக வரலாற்றின் ஒரு பகுதியே.

கடலோடிய நகரத்தார்கள் ஒட்டு மொத்த தமிழ்ச் சமூக வரலாற்றின் முன்னோடிகள் ஆவர் என்றால் அது மிகையாகாது.

சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மலேசியா, தாய்லாந்து, கம்போடியா, இந்தோனேசியா (ஜாவா, சுமத்திரா), இலங்கை, சீனா ஆகிய நாடுகளுடன் தமிழகம் கடல் வழியே வணிகத் தொடர்பு கொண்டிருந்தது. அவ்வாறு தொடர்பு கொண்டிருந்த நாடுகளில் தமிழர்கள் இருந்ததற்கான அடையாளங்கள் இன்றும் காணக்கிடைக்கின்றன. அப்படிப்பட்ட அடையாளங்கள் இன்றும் சீனாவில் உள்ள குவான்சோ நகரில், அங்குள்ள அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தி வைத்திருக்கிறார்கள்.

குவான்சோ நகரம் எங்கிருக்கிறது? தமிழகக்கரையில் இருந்து தென்கிழக்கில் சென்றால் வருவது தாய்லாந்து, மலேசியா,

இந்தோனேசியா ஆகிய நாடுகள். மலேசியாவிற்கும் இந்தோனேசியாவிற்கும் இடையே உள்ளது மலாக்கா நீரிணைப்பு ஆகும். அங்கிருந்து கடல் வழியே வடதிசை நோக்கிச்சென்றால் வரக்கூடிய நாடுகள் கம்போடியா, வியட்நாம் மற்றும் சீனா ஆகும்.

சீனாவின் கிழக்குக் கடற்கரையில் தென்சீனக் கடலில் உள்ள துறைமுக நகரம் குவான்சோ ஆகும். குவான்சோவின் பழைய பெயர் செய்டன் (Zayton or Zaiton) ஆகும். சீனாவின் இன்றைய பியூஜியான் மாநிலத்தில் உள்ளது.

**திசையாயிரத்து ஐந்நூற்றுவர் வணிகச் சமூகம்** (Mercantile Community) :

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் என்று இன்று அழைக்கப்படுகின்ற வணிகச் சமூகம் பல நூறு ஆண்டுகளில் பல விதமான மாறுதல்களைக் கடந்து வந்துள்ளது. அவர்கள் வாழ்ந்த இடம் மாறியுள்ளது. பெயர் மாறி உள்ளது, பிரிவும் ஏற்பட்டுள்ளது.

நகரத்தார்களின் நெடிய வரலாற்றின் ஒரு சிறு பகுதியை மட்டும் இனி வரும் பக்கங்களில் நாம் பார்க்கலாம்.

பழங்காலத்தில், அதாவது பழங்காலம் என இங்கு குறிப்பிடுவது மூன்றாம் தமிழ்ச் சங்க காலமாகும். கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி மூன்றாம் நூற்றாண்டு வரையிலான (சுமார் 2300 ஆண்டுகளுக்கு முன்னர்) காலகட்டத்தில் பொருட்களை ஓரிடத்தில் இருந்து பிறிதொரு இடத்திற்குக் கொண்டு சென்று விற்பனை செய்தும், அங்கு கிடைக்கும் பொருட்களைத் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வந்து விற்பனை செய்தும் வந்தனர். அவ்வாறு கொண்டு விற்கச் செல்கையில் பாதுகாப்புக் கருதி, குழுவாக இணைந்தே சென்றனர். பாதுகாப்புக் கருதியோ அல்லது விற்பனை செய்யப்படும் பொருட்களின் அடிப்படையிலோ ஒவ்வோர் குழுவும் இணைந்தே இயங்கி வந்தது. அவ்வாறு இயங்கிய ஒவ்வொரு குழுவும் தனித்தனிப் பெயர்களால் அழைக்கப் பெற்றன. பஞ்சு, நூல், நெல், எண்ணெய், அரிசி, நறுமணப் பொருட்கள், பொன், விலையுயர்ந்த மணிகள், சந்தனம், அகில், பட்டு, தந்தம் என அவர்கள் கையாண்ட பொருட்களின் பட்டியலை பிரான்மலை வணிகக்குழு கல்வெட்டின் (சுமார் 700 ஆண்டுகளுக்கு முற்பட்டது) மூலமாக நாம் அறிகிறோம்.

சங்ககாலத்திற்கு முன்னரும், சங்ககாலத்திலும் அதற்குப் பிந்திய காலத்திலும் தமிழகத்தில் உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு வணிகம் சிறந்திருந்தது. உள்நாட்டு வணிகம் தரைவழியாகவும் கடற்கரை ஓரமாகக் கப்பல் வழியாகவும் நடைபெற்றது. உள்நாட்டு வணிகம் தமிழகத்திற்குள் மட்டுமல்லாது தமிழகத்திற்கு வெளியேயும் நடைபெற்றது.

வெளிநாட்டு வணிகம் கடல் வழியாக நடைபெற்றது. வெளிநாட்டு வணிகத்தில் உள்நாட்டு வணிகர்கள் மட்டுமல்லாது வெளிநாட்டு வணிகர்களும் ஈடுபட்டனர். வணிகர்கள் குழுக்களாகவே இயங்கினர். ஒவ்வொரு குழுவுக்கும் தனித்தனியாகப் பெயர்கள் இருந்தன. அவற்றுள் சிலவற்றின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.

*திசையாயிரத்து ஐநூற்றுவர்*

*நானாதேசி*

*பாணித வணிகர்*

*மணிக்கிராமத்தார்*

*அஞ்சு வண்ணத்தார்*

*பதினெண் விசயத்தார்*

*மலைமண்டலத்து குதிரைச்செட்டி*

*தென்னிலங்கை வளஞ்சியர்*

மேற்கண்ட வணிகக் குழுக்களில் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக் குழுவே அனைத்து வணிகக் குழுக்களையும் விடப் பெரிய அளவில் அல்லது ஆற்றலுடன் செயல்பட்டதாகத் தெரிகிறது. சிவகங்கை மாவட்டம் பிரான்மலையில் கி.பி.13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டு உள்ளது. திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக்குழு என்ற பெயரின் கீழ், பல்வேறு குழுக்கள் இயங்கி வந்திருப்பதைப் பிரான்மலைக் கல்வெட்டு தெளிவாகத் தெரிவிக்கிறது. பிரான்மலை திருக்கொடுங்குன்றநாதர் கோயிலில் அனைத்து வணிகக் குழுவினரும் இணைந்து மேற்படி (பிரான்மலை திருக்கொடுங்குன்றநாதர்) கோயிலுக்குச் செலுத்த வேண்டிய வரிகள் தொடர்பாக ஒரு கூட்டத்தைக் கூட்டினர். அக்கூட்டத்தில் கலந்து கொண்ட வணிகக் குழுவினர் அவர்கள் கையாண்ட பொருட்கள்,

அப்பொருட்களுக்கு விதிக்கப்பெற்ற வரிகள் தொடர்பான செய்திகளை அந்தக் கல்வெட்டு தெளிவாக வரையறுத்துக் கூறுகிறது.

இன்றும் கோயிலுக்கு நன்கொடை செலுத்த விரும்புபவர்கள் வரியாகவோ, ஏலத்தின் மூலமாகவோ, மகமை மூலமாகவோ செலுத்துகின்றனர்.

மகமை என்ற சொல் மகன் + மை அதாவது மகனுக்குச் செய்வது போல இறைவனுக்குச் செய்வதுதான் மகமை ஆகும். ஐநூற்றுவர் வணிகக்குழுவை அக்கல்வெட்டு தெளிவாக மையப்படுத்துகிறது. மேலே குறிப்பிடப்பெற்றுள்ள வணிகக்குழுக்கள் அனைத்துமே கடல் வணிகத்தில் ஈடுபட்டிருந்தன.

*(தொடரும்...)*

## என்ன செய்து கொண்டிருக்கிறீர்

திருமதி. முத்துலெட்சுமி

ஆசிரியை, மழலையர் மற்றும் தொடக்கப் பள்ளி, கோவினூர்

இக்கணத்தில் குழந்தைகளே
என்ன செய்கிறீர்?
சீருடையில் சிங்காரமாய்ப்
பள்ளி வரும் குழந்தைகளே
ஆசிரியர் வந்தவுடன்
வரிசையாக வணக்கம் சொல்வீர்! (இக்கணத்தில்)

தங்களுடன் இறைவணக்கத் தோடு
தொடங்கும் நாளாய்
அத்தனையும் இனிக்கின்ற
நல்ல நாளே.

சின்னச் சின்னக் குறும்புகளோடு
அரும்புகள் நீங்கள் புரியும் சேட்டை
இமைக்கும் பொழுதில்
மறைந்திடும் அன்றோ?
பள்ளிக்கு நீங்கள் வந்தால் (இக்கணத்தில்)

ஆசிரியர் தினத்தில் நீங்கள்
அன்பாய் அளிக்கும் பேனாக்கள்
அத்தனையும் குழந்தைகள் தினத்தில்
அன்பாய் நாங்கள் பெறுதற்கே
என்று கொஞ்சும் மழலையிலே
இனிமை நிறைந்தே கூறிடுவீர் (இக்கணத்தில்)
கொரோனா என்னும் கிருமியினால்
குழந்தைகள் இணைய வழியினிலே
கல்வி கற்பது இனிக்கின்றதா?
காலம் மாறும் சந்திப்போம் (இக்கணத்தில்)
குழந்தைகள் தினத்தைக் கொண்டாடி
அன்புப்பரிசை ஆசிரியர் தருவார்
பிஞ்சுக் கைகள் கோலமிட
சமத்துவப் பொங்கல் வைத்திடுவோம்

நட்புடன் கூடி ஆடிடுவோம்
கலை நிகழ்ச்சிகள் நடத்திடவே
ஆண்டுவிழாவும் நிகழ்ந்திடுமே

எப்படி உள்ளீர் கண்மணிகாள்
இக்கணம் என்ன செய்கின்றீர்
எங்கிருந்தாலும் பத்திரமாய்
இருக்க வேண்டும் பிள்ளைகளே
பள்ளி திறந்ததும் வந்திடுவீர்
பட்டாம் பூச்சியாய்ச் சிறகடித்து
திரிந்துமகிழ வேண்டுமன்றோ (இக்கணத்தில்)

---

இந்த இதழில் இடம் பெற்றுள்ள கவிதைகள் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களைச் சார்ந்த ஆசிரியர்கள், ஆசிரியர் தின விழா அன்று வாசித்த கவிதைகள்.

## திருக்குறள் காட்டும் இறையுணர்வு

-இல. பழனியப்பன்
(ஓய்வு பெற்ற மனித வள மேம்பாட்டு அலுவலர்)

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்**
**யாதும் ஊரே யாவரும் கேளிர்.**

என்ற இந்த நமது பரந்த மனப்பான்மை இன்று உலகளாவிய அளவில் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் பட்டிருப்பது நமக்குப் பெருமை தருகிறது. ஆனால் அதைச் செயல்படுத்துவதில் சிக்கல் இன்றளவும் சிலரால் இருக்கவே செய்கிறது. நமது இலக்கியங்கள் அனைத்தும் உலகம் முழுவதும் வாழவே வழிகாட்டியாக அன்று முதல் இன்றுவரை திகழ்வது யாரும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாத பேருண்மையாகும். அனைத்து இறைநெறிகளின் பொதுத்தன்மை, நமது திருக்குறளில் அமைந்திருப்பது போல் வேறு எங்கேயும் காண முடியாத ஒன்றாகும். அதே நேரம் சுருங்கச்சொல்லி எல்லோர்க்கும் விளங்கவைக்கும் தனித்தன்மையும் திருக்குறளுக்கு மட்டுமே அமைந்துள்ளது.

நம்மை மீறிய சக்தியே இறைவன்.அதுவே பரம்பொருள். இது இன்று உலகம் முழுவதும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு பொன்னான கருத்தாகும். அந்தச் சக்தியை எல்லாச் சமயத்தினரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் கடவுள் வாழ்த்து என்ற முதல் அதிகாரத்திலேயே அறிமுகப்படுத்தி இருப்பது, திருக்குறளுக்கே உரிய தனிச்சிறப்பு என்பதில் மிகையில்லை; இந்தத் தனித்தன்மையை உணர்ந்த பேரறிஞர் ஜி. யு. போப் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலகறியச் செய்துள்ளார்.

எல்லா மனிதர்களும் என்றும் நல்லுறவுடன் வாழ, குறள் காட்டும் இந்த இறையுணர்வே வழிகாட்டுவதை உணர்ந்ததன் விளைவாக உலகத்தின் 18 முக்கிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதன் விளைவே இன்று உலகில் உலா வரும் வேற்றுமையிலும் ஒற்றுமை என்பதாகும்.

போருக்கும், பூசலுக்குமிடையே இன்றளவும் தடுமாறிக் கொண்டிருக்கும் இந்த உலகை வள்ளுவர் காட்டும் வழி ஒன்றே இறையுணர்வு மூலம் மனித உறவைப் பலபடுத்தி உய்விக்க முடியும் என்பதே நிரூபிக்கப்பட்ட பேருண்மையாகும்.

மனித வாழ்வின் தொல்லைகளுக்கும் துயரங்களுக்கும் அடிப்படைக் காரணம் ஐம்புல உணர்வுகளே; அவற்றை வெற்றி பெற்றால் மட்டுமே நல்வாழ்வு வாழ முடியும் என்ற கருத்தை இன்று உளவியல் அறிஞர்கள் நிரூபித்துள்ளார்கள். ஆனால் இதை அன்றே சொல்லி அவற்றை வெற்றி கொள்ள வழி வகுத்தவர் வள்ளுவர் மட்டுமே.

நமது மனக் கவலையை மாற்றும் மருந்து இறைவன் திருவடிகளைப் பற்றிக் கொள்வதே என்று ஆணித்தரமாகச் சொல்லியுள்ளார். சிக்கெனப் பிடித்தேன் தெய்வமே சிவபெருமானே என்ற மாணிக்கவாசகரின் வேண்டுகோளும் இதை வலியுறுத்துவதை ஒப்பு நோக்க வேண்டும்.

இறைவனின் படைப்பில் மிக உயர்ந்தது மனிதப் பிறப்பே. அந்தப் பிறப்பைத் தனது பேறுகளில் ஒன்றாகக் கொண்ட மனிதன் இன்று தன்னைப் படைத்தவனையே கேள்விக்குறியாக்கித் தடுமாறிக் கொண்டிருக்கிறானே என்ன செய்வது? ஆம், தன்னைப் படைத்து, இந்த அற்புத வாழ்வு தந்து இந்த உலகில் உரிமையோடு வலம் வரச் செய்த அந்த ஒப்பற்ற சக்தியை வேண்டும் போது மட்டும் நினைப்பது நன்றியில்லாத செயலாக வள்ளுவருக்கு மிகுந்த மன வாட்டத்தைக் கொடுப்பதோடு நம் எல்லோருக்கும் மன வாட்டத்தைக் கொடுப்பதும் உண்மை தானே.

பிறந்தது முதல் இறுதி நாள்வரை நம்மை ஒவ்வொரு வினாடியும் வழி நடத்தும் அந்த ஒப்பற்ற சக்தியை உயிர் உள்ள வரை நினைப்பது தானே நன்றியுணர்வு. எந்தப் பிரதிபலனும் எதிர்ப்பார்க்காமல் மனித குலத்தைப் பாது காக்கிறார் இறைவன். ஆண்டி முதல் அரசன் வரை அனைவரையும் சமமாக நடத்தும் இறைவன் மட்டும் தானே உலகில் உண்மையான சமத்துவ வாதி.

அறத்துப் பாலில் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த்து அமைந்திருப்பது நாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்று. அந்த அதிகார அமைப்பு முறையே வள்ளுவரை மற்றவர்களிடமிருந்து மாறுபடுத்திக் காட்டுகிறது.

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு**

இதுவே முதல் குறள் மட்டுமல்ல; முதன்மைக்குறளும்

ஆகும்.ஆதிபகவன் என்பது இறைவனை, அவனது தொன்மையைக் குறிக்கிறது. எழுத்துக்கள் எவ்வாறு அகரத்தை முதன்மையாகப் பெற்றுள்ளதோ அவ்வாறே உலகம் இறைவனையே முதன்மையாகப் பெற்றுள்ளது. எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் இந்தக் குறள் அமைந்துள்ளதே ஒரு தனிச்சிறப்பாகும். எந்நிலையில் உள்ள மக்களாயினும் இறைவனைப் புரிந்து கொண்டு அவன் தலைமையை வாழ்நாள் முழுவதும் ஏற்றுக் கொள்வதே உயரிய நெறி.

கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின் என்ற குறளில் மனிதர்கள் ஏறிவந்த ஏணியையே மறந்து ஒதுக்கி விட்டார்களே என்ற வள்ளுவரின் ஆதங்கம் நேரடியாகத் தெரிகிறதல்லவா. நமது தாய் மூலம் இந்த உலகில் இறைவனாகிய வாலறிவன் நம்மை அறிமுகப்படுத்தியுள்ளார். இந்த அறிமுகத்தின் விளைவாகவே நாம் அன்றாடம் பல்வேறு துறைகளில் வெற்றிக் கொடி நாட்டி வருகிறோம். அந்த இறைவனுக்கு நன்றி சொல்வதே அவன் அடி தொழுதலேயாகும்.

ஒவ்வொரு வினாடியும் இந்த உணர்வு நமக்கு உந்து சக்தியாக வேண்டாமா; சற்றுச் சிந்தியுங்கள். இதை மறந்த மனித குலத்திற்கு இந்த வினா மூலம் இறைவனை மற்றவர்களுக்கும் அறிவுறுத்துகிறார் வள்ளுவர். இந்த உலகில் நீடு வாழ நாம் என்ன செய்ய வேண்டும். நாம் வாழும் காலத்திலேயே இறைவனின் திருவடிகளைப் பற்றிக் கொண்டால் நீண்ட நாள் கட்டாயம் வாழலாம். மேலோட்டமாகப் பார்த்தால் இது நமக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆழ்ந்து சிந்தித்தால் மட்டுமே இதன் உண்மையான பொருள் விளங்கும்.

நம்மையே இறைவனிடம் ஒப்படைக்கும் போது நாம் தவறு செய்ய மாட்டோம். அதன் விளைவாக விருப்பு, வெறுப்பு இல்லாத அன்பு நம் உள்ளத்தில் மலரும். நான், எனது என்ற சுயநோக்கு மாறி, நாம், எமது என்ற பொது நோக்கு உருவாகும். நான் என்ற மனநிலை இறைவனிடம் நம்மை நாம் அர்ப்பணிக்கும் போதே மாறிவிடும். இதற்கு சரணாகதித் தத்துவம் என்று பெயர். சரணாகதி மட்டுமே நமக்குச் சமத்துவ உணர்வை மேலோங்க வைக்கும். நம்மை ஆட்டிப் படைக்கும் தன் முனைப்பு (EGO) மாறி, கூட்டு மனப்பான்மை உருவாகும். அதன் விளைவாக உடல் நோயும், மனநோயும் நம்மை நெருங்கவே தயங்கும்; நீண்ட நாள் வாழ எளிய வழி பிறக்கும்.

**வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல.**

மிக எளிமையாக, தெளிவாக நமக்கு வடிவமைத்துத் தந்துள்ளார் நமது வள்ளுவச் சித்தர். இது சற்று மாறுபட்ட அணுகுமுறை கொண்டுள்ளது. அதாவது இறைவனின் திருவடியை அதாவது பற்றற்றான் பற்றினைப் பற்றிக் கொள்வதே தனி மனித தகாத ஆசைகளை வேரறுக்கும்.

யாண்டும் இடும்பை இல என்ற வள்ளுவரின் ஆணித்தரமான சொல்லை நாம் கவனிக்க வேண்டும். நம் மனதில் இறைவன் குடிவந்த பின்னர், எந்தத் துன்பமும் நம்மை ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லி, துன்பத்தைத் தாங்கும் மனப்பக்குவம் தன்னம்பிக்கை மூலம் வந்துவிடும் என்று நம்மை வள்ளுவர் வழி நடத்துகிறார்.

இன்று உலக முன்னேற்றத்திற்குக் காரணமான தன்னம்பிக்கையை அன்றே வள்ளுவர் அறிமுகப்படுத்தி இருப்பது அவரது தீர்க்க தரிசனத்தின் விளைவுதானே. மனம் அறியாமையில் இருந்து மீண்டும் அதன் வழி நல்வினை, தீவினை ஆகிய இருவினையில் இருந்து நம்மைப் பாதுகாப்பது நமது உண்மையான இறையுணர்வே.

இறைவனின் உண்மையான புகழை விரும்பி எப்போதும் அன்பு செலுத்துவதே இதற்கு வழி என்று கூறும் வள்ளுவர்,

**இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

என்ற இந்தக்குறளில் இருள் சேர் என்று வினைகளுக்கு அடைமொழி கொடுத்திருப்பது ஆழ்ந்து கவனிக்க வேண்டிய ஒன்றாகும். இருளை யாரும் விரும்ப மாட்டோம்; இதன் அடிப்படையில் வள்ளலார் கண்ட ஒளி வழிபாடே உலகெங்கும் ஏற்றுக் கொள்ளப்பட்டு உலா வந்து கொண்டிருப்பதும் நமக்கு வள்ளுவர் வழியில் பெருமை தருகிறது.

நாம் எல்லோரும் இறைவனுடைய பிள்ளைகள்; அவனது அருளால் மட்டுமே என்றும் ஏற்றமுடன் வாழ முடியும் என்பது வள்ளுவரின் அசைக்க முடியாத நம்பிக்கை. வள்ளுவர் பார்வையும் இறைவனைப் போல் ஆணும் பெண்ணும் சமமான இருகண் என்ற நோக்கில்

உள்ளது. நமது முன்னோர்கள் கைமாறு கருதாமல் செயல்புரிவதே உயர்ந்த அறமாகக் கருதிச் செயல்பட்டார்கள். அதுவே கடமையாகப் பார்க்கப்பட்டது.

இந்தக் கருத்தினையே நமது இலக்கியவாணர்கள் வள்ளுவர் வழியில் மக்கள் அறிந்து கொள்ளும் வண்ணம், தமது படைப்புக்களில் வலியுறுத்தி வருகிறார்கள். படிப்படியாகச் செல்வதே பாதுகாப்பான செயல் ஆகும். இதுவே முழுமைதரும்.

ஐம்புலன் அடக்கம் என்பது மன உறுதியைச் சார்ந்த ஒன்றாகும்; இதற்கு உடல் நலம், மனநலம், யோகம் மற்றும் தவம் உறுதுணை புரிகின்றன. புலனடக்கம் பெற்ற உண்மையான தெய்வப்பிறவியான வள்ளுவச் சித்தர் நம்மை மட்டுமின்றி இறை நெறி மூலம் ஒட்டுமொத்த உலகுக்கே வழி காட்டுகிறார். ஆகவே நாம் எல்லா நிலையிலும் எல்லாவற்றையும் இறைவன் செயலாக ஏற்றுச் செயல்படுவதே வள்ளுவருக்கு நாம் செலுத்தும் உண்மையான நன்றிக் கடனாகும்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கொடுங்கோன்மை

(மன்னன் தன் முறைமையிலிருந்து மாறுபடுதல்)

1. **கொலைமேற் கொண்டாரின் கொடிதே அலைமேற்கொண்டு**
   **அல்லவை செய்துஒழுகும் வேந்து..**

கொலைமேற் கொண்டாரின் - கொலைத் தொழிலை மேற்கொண்டவரை விட; கொடிதே - கொடிதாகும் (கொடியவன் ஆவான்); அலைமேற் கொண்டு - குடிமக்களைத் துன்புறுத்தி; அல்லவை - நன்மை அல்லாத தீங்குகளை; செய்து ஒழுகும் வேந்து - செய்து ஆட்சி செய்யும் வேந்தன்.

குடிமக்களைத் துன்புறுத்தித் தீங்குகள் செய்து ஆட்சி செய்யும் வேந்தன் கொலைத் தொழிலை மேற் கொண்டவரைவிடக் கொடியவன் ஆவான்.

கொண்டாரின் - இன் உவம உருபு.

2. **வேலொடு நின்றான் இடுஎன்றது போலும்**
   **கோலொடு நின்றான் இரவு.**

வேலொடு நின்றான் – வேலை ஏந்தி அச்சுறுத்தி நிற்பவன்; இடு என்றது போலும் – பொருளைத்தா என்று கேட்பது போல ஆகும்; கோலொடு நின்றான் இரவு – தண்டிப்பதாகச் சொல்லிக் குடிகளிடம் பொருள் கேட்பது.

மன்னன் தண்டிப்பதாகச் சொல்லிக் குடிகளிடம் பொருளைக் கேட்பது கள்வன் வேலை ஏந்தி அச்சுறுத்திப் பொருள் கேட்பது போல ஆகும்.

**3. நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்**
**நாள்தொறும் நாடு கெடும்.**

நாள்தொறும் நாடி – நாள் தோறும் நாட்டு நிகழ்வுகளை ஆராய்ந்து; முறைசெய்யா மன்னவன் – முறைசெய்யாத மன்னன்; நாள் தொறும் நாடு கெடும் – நாள் தோறும் நாட்டை இழப்பான்.

நாட்டு நிகழ்வுகளை நாள் தோறும் ஆராய்ந்து முறை செய்யாத மன்னவன் நாள் தோறும் நாட்டை இழப்பான். அவனை அறியாமலேயே அவனது நாடு அழியும்.

**4. கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் கோல்கோடிச்**
**சூழாது செய்யும் அரசு.**

கூழும் – ஈட்டிய பொருளையும்; குடியும் – குடிமக்களையும்; இழக்கும் – இழப்பான்; கோல்கோடி – முறை தவறி; சூழாது – ஆராயாது; செய்யும் அரசு – செயல்புரியும் அரசன்.

முறை தவறியும் ஆராயாதும் செயல் புரியும் அரசன் தான் ஈட்டிய பொருளையும் குடிமக்களையும் ஒருசேர இழப்பான்.

**5. அல்லல்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே**
**செல்வத்தைத் தேய்க்கும் படை.**

அல்லல்பட்டு – குடிமக்கள் துன்பம் அடைந்து; ஆற்றாது – பொறுக்க முடியாமல்; அழுத கண்ணீர் அன்றே – அழுத கண்ணீர் தான்; செல்வத்தைத் தேய்க்கும் படை – அரசனின் செல்வத்தைத் தேய்க்கும் கருவியாகும்.

அரசன் முறை செய்யாததால் குடிமக்கள் துன்பமடைந்து பொறுக்க முடியாமல் அழுத கண்ணீர் அவ்வரசனின் அரசச் செல்வத்தைத் தேய்க்கும் கருவியாகும்.

அல்லல்பட்டு, ஆற்றாது, அழுத – வினை எச்சங்கள்.

**6. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃது இன்றேல்**
**மன்னாவாம் மன்னர்க்கு ஒளி.**

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை - மன்னருக்கு நிலையானது செங்கோன்மை ஆகும்; அஃது இன்றேல் - அஃது இல்லையெனில்; மன்னாவாம் மன்னர்க்கு ஒளி - மன்னருக்குப் புகழ் நிலைபெற மாட்டாது.

மன்னருக்குப் புகழ் நிலையானது செங்கோன்மையினால் தான்; அஃது இல்லையெனில் மன்னருக்குப் புகழ் நிலைபெற மாட்டாது.

**7. துளிஇன்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்**
**அளி இன்மை வாழும் உயிர்க்கு.**

துளி இன்மை - மழை இல்லை என்றால்; ஞாலத்திற்கு - உலகத்து உயிர்களுக்கு; எற்று - எத்தகைய துன்பம் ஆகும்; அற்றே - அது போன்றது தான்; வேந்தன் அளி இன்மை - மன்னனின் இரக்கமில்லாத தன்மை; வாழும் உயிர்க்கு - வாழ்கின்ற உயிர்களுக்கு.

மழை இல்லை என்றால் உலகத்து உயிர்களுக்கு எத்தகைய துன்பம் தருமோ அது போன்று மன்னனின் இரக்கமின்மை அவன் குடிமக்களுக்குத் துன்பம் தரும்.

**8. இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா**
**மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

இன்மையின் - பொருளின்மையைக் காட்டிலும்; இன்னாது உடைமை - பொருளுடைய ராயிருத்தல் கொடுமையாகும்; முறைசெய்யா - முறைமை செய்யாத; மன்னவன் கோல் கீழ்ப் படின் - மன்னனின் ஆட்சியில் வாழ்ந்தால்.

முறைசெய்யாத மன்னனின் ஆட்சியில் வாழ்ந்தால் பொருள் இன்மையைக் காட்டிலும் பொருள் உடையவராய் இருத்தல் கொடுமையானது.

**9. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி**
**ஒல்லாது வானம் பெயல்.**

முறைகோடி - செய்யும் முறையில் தவறாகி; மன்னவன் செய்யின் - மன்னன் செய்தால்; உறைகோடி - மழைத்துளி தவறாகி; ஒல்லாது வானம் பெயல் - வானம் மழை பொழிய மாட்டாது.

மன்னன் முறை தவறிச் செய்தால் வானம் மழைத்துளி தவறிப் பொழிய மாட்டாது.

கோடி - வினைஎச்சம்.

**10. ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.**

ஆபயன் குன்றும் - பசுவின் பயன் குறையும்; அறுதொழிலோர் - ஆறுவகைத் தொழில் உடையோர்; நூல்மறப்பர் - அவற்றுக்கான நூல்களை மறந்துவிடுவர்; காவலன் காவான் எனின் - மன்னன் மக்களை முறையாகக் காக்கவில்லை என்றால்.

மன்னன் மக்களை முறையாகக் காக்கவில்லை என்றால் ஆவின் பயன் குறையும்; ஆறுவகைத் தொழிலை உடையவர்களும் அவற்றுக்கான நூல்களை மறந்து விடுவர்.

*(தொடரும்...)*

## நிறங்கள் ஓர் ஐந்துடையாய்

- பா.அசோக்குமார், கடலூர்.

பசுஞ் சோலைகளும் பூத்துக்குலுங்கும் வண்ண மலர்த் தோட்டங்களும் கண்ணிற்கும் மனதிற்கும் குளிர்ச்சியோடு அமைதியையும் தருவனவாம். வண்ண மயமாய் வாழ்வதே வாழ்விற்கு மகிழ்ச்சி.

சூரியன் ஏழு குதிரை பூட்டிய தேரிலே பவனி வருகிறான் எனவும் சொல்வர். இந்த நிறங்களின் முதல் எழுத்துக்களை மட்டும் சேர்த்து ஊகநீபமஆசி எனவும் VIBGYOR எனவும் நினைவில் வைத்துக் கொள்ளப் பள்ளிகளில் படித்திருப்போம்.

இவை ஊதா, கருப்பு, நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு, எனத் தமிழிலும் Violet, Indigo, Blue, Green, Yellow, Orange, Red என ஆங்கிலத்திலும் பெயர்படும்.

இவ்வாறிருக்க மணிவாசகப் பெருமானோ நிறங்கள் ஓர் ஐந்துடையாய் எனச் சிவபுராணத்திலே 49 ஆம் வரியில் பாடுவார். குருவாக ஆட்கொண்டவனே பின்னாளில் சீடனாக வந்து தன் கைப்படத் திருவாசகத்தை எழுதிக் கொண்ட பெருமை உடையவர் இவர்.

ஐந்து என்ற எண்ணும் ஐந்தின் கலவையும் தனிச்சிறப்புடையது. பஞ்ச கிரித்தியம்(ஐந்தொழில்கள்) பஞ்சபூதம், பஞ்சலோகம், பஞ்சாமிர்தம், பஞ்சகவ்யம், பஞ்சபாண்டவர்கள் என இது விரியும். ஆரூரின் பஞ்சமுக வாத்தியமும் கிளிகளிலே பஞ்சவர்ணக்கிளியும் சிறப்புடைத்து.

இவை அத்துணையிலும் மேலாகச் சிறப்பாக, சைவத்தின் மூலமந்திரம் பஞ்சாக்கிரமே, அது தூலமாயினும் சூக்குமமாயினும், இரண்டும் ஒன்றே.

இதைச், சொல்லும் நா நமசிவாய எனவும், சிவாய நம என நீறணிந்தேன் எனவும், அஞ்சுபதம் சொல்லி எனவும், வந்த கூற்று அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே எனவும் நால்வர் பெருமக்கள் பலவாறாகப் பாடிப் பரவியுள்ளார்கள்.

சைவசித்தாந்த ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கில் பஞ்ச பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், என்பன அடங்கும். இவ்வைந்தினுக்கும் வடிவம், குறி, எழுத்து, அதிதெய்வம், தொழில், ஆகியவற்றோடு நிறத்தையும் நுணுக்கமாக வகுத்துள்ளது சித்தாந்தம்.

நிலம் - பொன் - மஞ்சள்
நீர் - வெண்மை - வெள்ளை
நெருப்பு - செம்மை - சிவப்பு
காற்று - கருமை - கருப்பு
ஆகாயம் - தூமம் - பாசி என்பதைப் பச்சை என ஒரோவழிக் கொள்ளலாம்.

முன்சொல்லிய ஏழு நிறங்களிலே ஊதா, நீல நிறங்கள் கருப்பிலும், ஆரஞ்சு நிறம் சிவப்பிலும் அடங்கும். இதை என்றும் உள்பொருளாகிய பதி, பசு பாசம் எனும் மூன்றில், பாசம், ஆணவம், கன்மம், மாயை என விரிந்து அதை ஒன்றெனக் கூறுவதற்கு ஒப்பாம். வெண்மையை அவர்கள் கணக்கில் கொள்ளவில்லை. நம் உடலும் இந்த உலகமும் பஞ்ச பூதங்களால் ஆனவையே.

இந்த ஐந்து நிறங்களில் உள்ள பொருட்களைக் குறிப்பிடும்போது மஞ்ச மஞ்சேர் என, வெள்ளை வெளேர் என, செக்கச் செவேர் என, கன்னங் கரேல் என, பச்சைப் பசேல் என அந்நிறத்தை இரட்டித்துக் கூறுவோம். இது மற்ற நிறங்களுக்குப் பொருந்தாது என்பதே இவ்வைந்து நிறங்களின் தனிப்பெருமையாம். அதனால்தான் மணிவாசகர் நிறங்கள் ஐந்துடையாய் எனப்பாடாமல் ஓர் ஐந்துடையாய் எனச் சிறப்பித்தார். ஓர் என்பது ஒப்பற்ற என்றாலும் ஓர்தல் – சிந்தித்தல் என்ற கருத்தில் இறைவனை இயற்கைத் தராசில் நிறுத்திப் பார்த்துக் கூறுவார் போல் நிறங்கள் ஓர் ஐந்துடையாய் என்றார். இதன்

தொடர்ச்சியில்தான் இறைவன் செம்பொற்சோதி நாதர், பால்வண்ண நாதர், செஞ்சடையப்பர், நஞ்சுண்டேசுவரர் (காரி உண்டிக் கடவுள்), மரகதலிங்க ஈசுவரர் என முறையே மஞ்சள், வெள்ளை, சிவப்பு, கருப்பு, பச்சை என்ற ஐந்து நிறங்களின் பெயர்களைக் கொண்டு அருள் செய்கிறார் என்பது தனிச்சிறப்பன்றோ. மேலும், கூடுதலாக அப்பருக்குத் திருவடி தீட்சை தந்தருளிய திருநல்லூர் திருத்தலத்தில் சிவபெருமானின் திருநாமம் ஐவண்ண நாதர் (பஞ்ச வர்ண ஈசுவரர்) என்பதும் நினைத்து மகிழத் தக்கது.

சிவபெருமானின் ஐந்து திருமுகங்களான சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் ஆகியவற்றில் முறையே வெண்மை, சிவப்பு, கருப்பு, தங்க நிறம்(மஞ்சள்), சாம்பல் நிறங்களில் காட்சி தந்து அருள் செய்கிறார் என்பது இவ்வைந்து நிறங்களின் மற்றுமொரு சிறப்பாம்.

அதே போல் மணிவாசகப் பெருமான் ஐக்கியமாகிய நடராசப் பெருமானின் திருநடன உருவம் ஐந்தெழுத்து மந்திரத்தையும் அவன் செய்யும் ஐந்தொழில்களையும் குறிப்பனவே. இதைச் சாத்திர நூலாம் உண்மை விளக்கத்தில் சேர்க்கும்; துடி சிகரம் - பாடல் எண்.33, தோற்றம் துடியதனில் - பாடல் எண்.35 என்பனவற்றால் அறியலாம். ஐந்தொழில்கள் ஆக்கல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல், ஆகியன. இதை மணிவாசகப் பெருமானே தனது சிவபுராணத்தின் 42, 43 வரிகளில் ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள்தருவாய், போக்குவாய், என்னைப் புகுவிப்பாய் எனப் பாடியுள்ளார்.

எனவே, வாதவூரர் கூற்றான நிறங்கள் ஓர் ஐந்துடையாய் என்பதன் பொருளை ஐந்தெழுத்து மந்திரமாகவும், ஐந்து முகங்களாகவும், அவற்றின் நிறங்களாகவும், அவன் அருளாட்சி செய்யும் திருநாமங்களாகவும் அவர் குறிப்பிடும் ஐந்தொழில்கள் என்பதோடு சேர்த்து விரித்து எண்ணிப் பொருளாகக் கொண்டால் பரவும் மகிழ்ச்சிக்கு எல்லையுண்டோ?

## ஆசிரியப் பெருமக்களுக்கு

(எஸ்.சாத்தாக்குட்டி, உடற்கல்வியியல் துறை)

அறிவும் அறமும் வளர்க்கும் அறிஞனே!
ஆணவம் ஆடம்பரம் அழிக்கும் அரசனே!
இனிமை புதுமை இயற்றும் புலவனே!
ஈகையும் ஈசனின் வடிவுமாய் இருப்பவனே!
உண்மை உழைப்பை உருவாக்கும் பிரம்மனே
ஊக்கமும் ஆக்கமும் உண்டாக்கும் வீரனே

எண்ணத்தில் எளிமை காட்டிடும் கலைஞனே
ஏற்றமும் ஏற்றமுற எழுந்தருளும் இறைவனே!
ஐயமின்றிக் கற்பிக்கும் அருமை ஆசானே
ஒழுக்கமும் ஒற்றுமையும் ஒன்றிணைக்கும் உயர்ந்தவனே
ஓங்கார வாழ்விற்கு ஒளிதரும் ஓவியனே!
ஔவையின் நல்வழியில் அறம்செய்யும் கர்ணனே!

## ஆசிரியர் பெருமை

ஆசிரியை, திருமதி. எம்.வள்ளியம்மை
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி, கோவிலூர்

குருவே உலகின் அறிவே
அறிவின் ஒளியே
எமக்கே எம்மைச் சொல்லித் தந்தவர் நீர்
இறைவன் தந்த வரம் நீர்
சொல்உளி கொண்டு உள்ளொளி காட்டிய
சிற்பி நீர்!
அறிவுத் தாகம் அகற்றிய
வற்றாத அருவி நீர்!

கரைந்து மணம்பரப்பும் சந்தனம்
நிழல் தந்து காத்திருக்கும் குளிர்தரு
தான் அழிந்து ஒளிதரும் மெழுகுவர்த்தி
பொழிந்து வளம்பெருக்கும் வான்மழை!
பாய்ந்திருக்கும் பெருநதி
வரையாது வழங்கும் மேகம்
இளமையாய் வீசும் காற்று

ஆசிரியரே! உம் நினைவுகளை எழுத
வானம் எனும் தாள் போதாது;
பூமி எனும் உண்டியலும் போதாது
நன்றிகளை நான் செலுத்த;
சுண்ணம் கொண்டு எம்
எண்ணம் உயர்த்தினீர்!
உம்தியாகம் சொல்லிடவே
ஆயிரம் நாவுகள் போதாது!
*ஆசிரியர்களுக்கு அன்பு வாழ்த்துக்கள்!*

# திருவிளையாடற்புராணம்

## கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது

பாண்டியன் ராஜராஜன் இந்திர பதவியைப் பெற்ற பின்னர் அவனது திருக்குமாரனாகிய சுகுணன் பாண்டியன் ஆனான். அவன் சிங்க ஏற்றினைப் போல விளங்கி உயிர்களின் துன்பங்களைப் போக்கி நல்லாட்சி செய்து வந்தான்.

அந்த நாளிலே வலிமை மிகுந்த ஒருவன் தனது பூர்வஜன்மத்திலே எல்லா வழிகளிலும் தருமமே புரிந்து கொஞ்சம் பாவமும் செய்ததால் இந்தப் பிறவியிலே கரிக் குருவியாக வந்து பிறந்தான். அந்தக் கரிக்குருவிக்குக் காக்கை முதலான வேறு பறவைகள் பகையாகித் துன்பம் கொடுத்தன. பல பறவைகளால் கொத்தப்பட்ட அக்குருவியின் தலையில் இரத்தம் ஒழுகிக்கொண்டே இருந்தது. அதனால் பயமடைந்து நகரத்திலே சில நாட்கள் வாசம் செய்தது. பின்னர் ஒரு நாட்டுக்குச் சென்றது. பூத்துக்குலுங்கிய மரக்கிளையொன்றின் மேல் சென்று இருந்தது. வெட்கத்தோடும் சோர்வோடும் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தது.

அப்போது அந்த மர நிழலில் தங்கும் பொருட்டு, சிவபக்தர் ஒருவர் வந்து அமர்ந்தார். விபூதியும், உருத்திராட்சமும் அணிந்திருந்த அப்பெரியவர் தீர்த்த யாத்திரை செய்து வருபவர். அவர் அங்கு இருந்தபடியே அங்கிருந்த சில பேர்களைப் பார்த்து எவருக்கும் நல்ல பலனைத் தரும் ஸ்தலம் மதுரை; தீர்த்தம் பொற்றாமரைக்குளம்; மூர்த்தி சோமசுந்தரப் பெருமான். ஒரே இடத்தில் இந்த மூன்று வகைச் சிறப்புகளையும் ஒருங்கே பெற்ற இடம் உலகத்திலே வேறெங்கும் கிடையாது. ஆதலால் மதுரையம்பதிக்கு இணையான ஸ்தலம் வேறில்லை. சோமசுந்தரப் பெருமான் தம்மை வணங்கி வழிபடும் அடியவர்களுக்கு எளியவர்; கோரிய வரங்களை இந்தப் பிறவியிலேயே அருளுவார். ஆதலால், விசேஷமான மூர்த்தி சோமசுந்தரக் கடவுளேயாவார் என்று நல்லுபதேசம் செய்துகொண்டிருந்தார். சிவபக்தர் போதித்ததைச் சோர்ந்து கிடந்த கரிக்குருவியும் கேட்டது. உடனே அதற்கும் ஞானம் பிறந்துவிட்டது. அதனால்தான் பறவையாகப் பிறந்த காரணம் தெரிந்தது. நான் இந்தப் பிறவியை ஒழிக்க வேண்டுமானால் இச் சிவபக்தர் சொன்னபடிக்கே செய்ய வேண்டும் என்று உறுதி கொண்டு நாட்டைவிட்டுப் பறந்து மதுரையம்பதியை அடைந்தது.

திருக்கோவிலைச் சார்ந்த பொற்றாமரைக் குளத்திலே தீர்த்தம் ஆடியது. சோமசுந்தரப் பெருமானைப் பிரதட்சிணம் செய்தது. மனமார்ந்த பக்தியுடன் மானசீக பூஜை செய்தது. இவ்வாறாக மூன்று நாட்கள் கழிந்து விட்டன. மீனாக்ஷியம்மையார்

சோமசுந்தரப் பெருமானைப் பார்த்து, தேவதேவா! கரிக்குருவி எதற்காக வழிபாடு செய்கிறது? இது இங்கு வந்த காரணம் என்ன? என்று வினாவினார். மதுரேசரும் அக்கரிக்குருவியின் வரலாற்றை முறையாக மொழிந்தருளினார். பின்னர் கரிக்குருவியின் மேலே திருவருள் நோக்கம் பாலித்து மிருத்தியுஞ்சய மந்திரத்தை உபதேசித்தருளினார்.

மதுராபுரி நாதர் அருளிய மிருத்தியுஞ்சய மந்திரம் செவியில் பட்டவுடனே அதனுடைய பிறவித் துன்பம் ஒழிந்தது. அதனது சிற்றறிவு நீங்கிப் பேரறிவு சித்தியாகிவிட்டது. சிவபெருமானின் திருவடிகளை உளத்தில் தியானம் செய்துகொண்டு அண்ணலே! அடியனை ஆளவும் வேண்டுமோ! எளியவர்களைத் தேடிச் சென்று அருள்புரிவதே தேவரீரது தன்மைபோலும்! எளியேன் முற்பிறப்பிலே செய்த தருமத்தால்தான் இப்பிறப்பிலே எம்பெருமான் வாயிலாக மந்திரோபதேசம் பெற்றேன். மறுமையில் சிவபக்தி பெறவும் இது காரணமாயிற்று. ஆயினும், அடியேனுக்குக் குறையொன்று உள்ளது. ஐயனே! கொடிய பறவைகள் எளியேனைத் துன்புறுத்துகின்றன. என் கதி அனைவரும் பார்த்துச் சிரிக்கும்படி ஆயிற்று என்று விண்ணப்பித்துக் கொண்டது. அப்போது கடவுள் அந்தக் கொடிய பறவைகளுக்கெல்லாம் நீ வலியான் ஆகக்கடவாய் என்று திருவாய் மொழிந்தருளினார். பிற்பாடும் அந்தக் கரிக்குருவி பெருமானே! எளியேனுக்கு இன்னும் ஒரு வரம் தந்தருள வேண்டும்; தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வலியான் எனும் பெயர் அடியேனது மரபிலே வருகின்ற பறவைகளுக்கெல்லாம் விளங்க வேண்டும். அப்பறவைகளும் தாங்கள் உபதேசித்த மந்திரத்தை ஓதியோதி உய்ய வேண்டும். அருள்புரிவீராக என்று இறைஞ்சியது. சோமசுந்தரப் பெருமானும் அவ்வாறே ஆகட்டும் என்று உறுதி கூறியருளினார். பின்னர் திரியம்பகம் என்னும் அவ்வேதமந்திரத்தைத் தெய்வம், ரிஷி, சந்தம் என்பனவற்றோடு உதாத்தம், அனுதாத்தம், சொரிதம் என்னும் மூவகைப்பட்ட ஓசையுடன் தெரிவித்தருளினார்.

கரிக்குருவியும் இறைவன் அருளிய திருமந்திரத்தை இடைவிடாது பயின்று வந்தது. அதனுடைய சாதிப் பறவைகளும் சிவபெருமான் அருள்வலிமையால் பறவைகளுக்கெல்லாம் வலிமை பெற்றவனாகி வலியான் என்னும் காரணப் பெயர்பெற்றுப் பறவை உலகிலே சிறப்புற்று வாழ்ந்தன.

பின்னர் கரிக்குருவி சிவபெருமானுடைய திருவடி நிழலை அடைந்து ஆனந்த நிலை எய்தியது.

***(தொடரும்...)***

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**